# தீக்கதிர்

இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியின் [மார்க்சிஸ்ட்] தமிழ் வார ஏடு

கதிர் 14 | 14—11—76 | 8 பக்கம் 40 காசு | பொறி 32


### மாநிலக்குழு அலுவலகத்தில் புரட்சிதின விழா

மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின்மாநிலக்குழு-தீக்கதிர் அலுவலகத்தில் நவம்பர் புரட்சிதினவிழா சிறப்பாகக் கொண்டாடப்பட்டது.

செங்கொடிகளால் அலுவலகம்அலங்கரிக்கப்பட்டிருந்தது. தமிழக ஜனநாயக மாதர் சங்க செயலாளர் தோழர் பாப்பா உமாநாத்—நவம்பர் புரட்சி தினம் வாழ்க! மார்க்சிசம்—லெனினிசம்வாழ்க!என்றமுழக்கங்களுக்கிடையே செங்கொடி ஏற்றிவைத்தார்.

## சோவியத் யூனியனுக்கு மக்கள் சீனம் அனுப்பிய நவம்பர் புரட்சி வாழ்த்துச் செய்தி

மக்கள் சீனத்துக்கும், சோவியத் யூனியனுக்குமிடையே உள்ள கொள்கை பிரச்சினை மீதான மாறுபடுகள் இருநாடுகளின் அரசாங்கங்களின் உறவுகளுக்கு தடையாக இருக்க வேண்டியதில்லை என சோவியத் யூனியனுக்கு மக்கள் சீனம் அனுப்பியுள்ள செய்தியில் குறிப்பிட்டுள்ளது.

1917 நடைபெற்ற நவம்பர் புரட்சி தினத்தையொட்டி சோவியத் மக்களுக்குவாழ்த்து தெரிவித்துசீன அரசாங்க உயர் மட்டக்குழு சோவியத் அரசாங்க உயர்மட்டக் குழுவிற்கு அனுப்பியுள்ளது.

மேலும் சோவியத் யூனியன் மக்களுடனை புரட்சிகர நட்பை கடைப் பிடிப்பதற்கு சீன மக்கள் எப்போதும் விரும்புகின்றனர் என்றும் அச்செய்தியில் கூறப்பட்டுள்ளது.

நவம்பர் புரட்சிதினம் பற்றிய சோவியத் செய்திப்படம் ஒன்றும் கடந்த 6ந்தேதி பீகிங் டெலிவிஷனில் காட்டப்பட்டது.

## கறுப்பர்கள் போராட்டமும் வெள்ளையர் வெளியேற்றமும்

வெள்ளை நிறவெறியர் ஆட்சியும் அதனை எதிர்த்து கறுப்பு மக்களின் கடுமையான போராட்டங்களும் நடக்கின்ற ரொடிசியாவிலிருந்து ஏராளமான வெள்ளையர்கள் வெளியேறி வருகின்றனர். ரொடிசிய அரசாங்கம் வெளியிட்ட தகவலின்படி 1975 வரை 10500 பேர் வெளியேறியுள்ளனர். ரொடிசியாவில் உள்ள மொத்த வெள்ளையர்களின் எண்ணிக்கை 2 லட்சத்து 70 ஆயிரம் பேராகும்.

இருபது முதல் முப்பத்தியொன்பது வயதுவரை உள்ளவர்களே பெரும்பாலும் வெளியேறுகின்றனர். இது. அந்நாட்டு பொருளாதாரத்தை பெரிதும் பாதித்துள்ளதாகக் கூறப்படுகிறது. ஏனெனில், பொருளாதாரத்தின் முக்கியத் துறைகளின் முக்கிய பொறுப்புகளில் வெள்ளையர்களே நியமிக்கப்பட்டுள்ளனர். திறமைமிக்க தொழிலாளர்கள் பற்றாக்குறை ஏற்பட்டுள்ளதால் தொழிற்சாலைகள் தங்களுடைய உற்பத்தியைகுறைக்கின்றன ரொடிசியாவிற்கு வரக்கூடிய வெளி நாட்டு தொழில் அதிபர்களின் எண்ணிக்கை இந்த ஆண்டின் முதல் 7 மாதங்களில் மட்டும் கடந்த ஆண்டைவிட கால் பங்கு குறைந்துவிட்டது. வெளிநாட்டு சுற்றுப்பயணிகளால் அரசாங்கத்திற்கு கிடைக்கும் வருமானம் 25 சதவீதம் குறைந்துவிட்டது. மேலும் இதன் தொடர்ச்சியாக சில நவீன ஹோட்டல்களும் மூடப்பட்டன.



## கருணாநிதி மீதான கிரிமினல் வழக்கு

முன்னாள் திமுக முதலமைச்சர் திரு. கருணாநிதி மற்றும் சில அமைச்சர்கள் மீது கூறப்பட்டுள்ள லஞ்ச, ஊழல் புகார்கள் பற்றி மத்திய அரசு நியமித்த சர்க்காரியா கமிஷன் விசாரித்து வரும் அதேசமயத்தில், திரு. கருணாநிதி மீது மத்திய புலனாய்வுத்துறை (சிபிஐ) கிரிமினல் வழக்கு ஒன்றை தனியாக கடந்த 16-ந்தேதி சென்னையில்தனிக் கோர்ட்டில் தாக்கல் செய்துள்ளது. அவ்வழக்கு இப்போது நடந்து வருகிறது.

தமிழக அரசின் வேண்டுகோளுக்கிணங்க கூடுதல் பெருநகர மாஜிஸ்டிரேட்டாக நியமிக்கப்பட்டுள்ளசாமிக்கண்ணு முன்னிலையில் இந்த வழக்கு தாக்கலாகியுள்ளது.

### குற்றச்சாட்டு விவரம்

1974-ல் தமிழ் நாட்டில் வறட்சி நிலவியபோது பஞ்சாப் மாநிலத்திலிருந்து இறக்குமதி செய்யப்பட்ட கோதுமையை பகிரங்க மார்க்கெட்டில் அதிக விலைக்கு விற்க இரு நிறுவனங்களுக்கு சலுகை காட்டியதாகவும் இதர நிறுவனங்களுக்கு இந்தச்சலுகை மறுக்கப்பட்டதாகவும், இவ்வாறு செய்யப்பட்டதால் சலுகை பெற்ற அந்த இரு நிறுவனங்களும் பெருமளவு பணம் சம்பாதிக்க முடிந்தது என்றும் அந்தக் குற்றச்சாட்டில் கூறப்பட்டுள்ளது.

கருணாநிதி தனது முதலமைச்சர் பதவியைப் பயன்படுத்தி அதிகார துஷ்பிரயோகம் செய்ததன் மூலம் அவ்வாறு சலுகைபெற்ற இரு நிறுவனங்களிடமிருந்தும் ரூ 4 5 லட்சம் லஞ்சம் வாங்கியதாக குற்றம் சாட்டப்பட்டுள்ளது,

இந்த வழக்கில் சம்பந்தப்பட்ட மதன்லால்குப்தா என்பவர் அப்ரூவர் ஆகியுள்ளார் என்றும் கோர்ட்டில் சி,பி.ஐ. தெரிவித்துள்ளது.

### பிரிவுகள்-தண்டனைகள் விவரங்கள் வருமாறு

இ.பி.கோ 161,468,471 ஆகிய பிரிவுகளின் கீழும், 1947 ஆம் ஆண்டைய லஞ்ச ஊழல் தடுப்புச் சட்டத்தின் 5(2) 5(ஏ) (டி) பிரிவுகளின் கீழும் இவ்வழக்கு தாக்கல் செய்யப்பட்டுள்ளது.

இ,பி.கோ161 — சட்ட விரோதமாக லஞ்சம் பெறுவது பற்றியதாகும். நிருபணமானல் 3ஆண்டு சிறை அல்லது அபராதம் அல்லது இரண்டும் சேர்த்து

இ.பி.கோ468— பொய்க் கையெழுத்திடல் பற்றியதாகும். நிருபணமானல் 7ஆண்டு சிறை அல்லது அபராதம் அல்லது இரண்டும்.

இ.பி.கோ471 — பொய்யானது என்பது தெரிந்திருந்தும் அத்தகைய பதிவேடுகளை உண்மையானவை என பயன்படுத்துவது பற்றியது. 7 ஆண்டு சிறைத் தண்டனை அல்லது அபராதம் அல்லது இரண்டும் சேர்த்து.

1947-ம் ஆண்டைய லஞ்ச ஊழல் தடுப்புப் பிரிவுகள்—7 ஆண்டு சிறைத்தண்டனை.

இவ்வழக்கு நவ 1-ந்தேதி விசாரணைக்கு வந்தது; திரு.கருணாநிதி சார்பில் ஸ்ரீலங்கா வழக்கறிஞர் திரு. ஜி. ஜி. பொன்னம்பலம் ஆஜராகி வருகிறார். வழக்கு தனிக்கோர்ட்டில் நடந்து வருகிறது.

## அமெரிக்காவின் புதிய ஜனாதிபதியாக ஜிம்மி கார்ட்டர் தேர்வு

கடந்த 1-ந்தேதி நடந்த அமெரிக்க ஜனாதிபதி தேர்தலில் ஜனநாயகக் கட்சி சார்பில் போட்டியிட்ட 52 வயது நிரம்பிய ஜிம்மி கார்ட்டர் வெற்றி பெற்றார். குடியரசுக் கட்சி சார்பில் போட்டியிட்ட அமெரிக்கஜனாதிபதி ஃபோர்டு தோல்வியுற்றார். உதவி ஜனாதிபதியாக ஜனநாயகக் கட்சியைச் சேர்ந்த மாண்டேல் என்பவர் தேர்ந்தெடுக்கப்பட்டார். 1977 ஜனவரி 20-ல் பதவிஏற்பார்.

புதிய ஜனாதிபதியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ள கார்ட்டர் சில பல ஆயிரம் ஏக்கர் நிலத்துக்கு அதிபதி ஆவார். நவீனப் பண்ணை நடத்தும் ஒரு முதலாளித்துவ மிராசுதாரர். வேட்பாளராகத் தேர்ந்தெடுப்பதற்காக நடந்த தேர்தலில், திரு. கார்ட்டருக்கு அமெரிக்க இராணுவக் காண்டிராக்ட் கம்பெனிகளான 'ஜெனரல் டைனமிக்ஸ்'. பிரபல 'லாக்—ஹீட்' போர் விமானக் கம்பெனி, மற்றும் பெரும் எண்ணெய்க் கம்பெனிகளும், எரிவாயுக் கம்பெனிகளும், ராக்பெல்லர், மார்கன் கம்பெனிகள் உட்பட பல பெரு முதலாளிகளும் இவருக்கு ஆதரவாக நின்றார்கள்.

தான் ஜனாதிபதியாகத்தேர்ந்தெடுக்கப்பட்டால், அமெரிக்காவின் பாதுகாப்புக்கோ, அல்லது அமெரிக்காவுடன் நெருங்கிய நட்பு நாட்டுக்கோ தேவை என்று கருதினால் அணு ஆயுதங்களை உபயோகிக்கத் தயங்கமாட்டேன் என்றுகடந்த ஜூலை 28-ந் தேதியன்று உறுதியளித்துள்ளார், திரு. கார்ட்டர்.

அதிக வேலை வாய்ப்பளிப்பதாகவும், அமெரிக்காவின் இராணுவத்திற்கு 7000 கோடி டாலர்செலவழிப்பதைக் குறைப்பதாகவும் தேர்தல் பிரச்சாரத்தின்போது உறுதியளித்தார்,

இவரது தாயார், பீஸ் கார்பஸ்' எனப்படும் அமைதிப் படையில் சேர்ந்து இந்தியாவில் ஒரு நர்சாக சிலகாலம் பணியாற்றியுள்ளார் என்பதும் குறிப்பிடத்தக்கது.

### முதல் தடவை

1949 க்கு பிறகு அமெரிக்காவின் தென் கோடியில் உள்ள ஒருவர் ஜனாதிபதியாக தேர்ந்தெடுக் கப் படு வ து ம். 1932 க்குப் பிறகு ஜனாதிபதி பதவியிலிருக்கும் ஒருவர்தோற்பதும் இதுதான் முதல்தடவையாகும்.

வெற்றிச்செய்தி கிட்டியதும் அமெரிக்காவை ஒற்றுமைபடுத்தி மீண்டும் மாபெரும் வல்லரசாகத் திகழச்செய்வேன் என்று கூறினார்.

1977 ஜன. 20-ந் தேதி கார்ட்டர் பதவியேற்று புது அமைச்சரவையையும் புதிய கொள்கையையும் அறிவிக்கும் வரை தற்போதுள்ள ஃபோர்டு அரசே நிர்வாகத்தைக் கவனித்துக் கொள்ளும்.

### பிரதமர் இந்திரா வாழ்த்து

திரு. கார்ட்டருக்கு பாரதப் பிரதமர் இந்திராகாந்தி, குடியரசுத் தலைவர் பக்ருதீன் அலி அகமது ஆகியோர் வாழ்த்துச்செய்தி அனுப்பியுள்ளனர்.

———

## அமெரிக்க கம்பெனிக்கு பிராகுவேயின் சலுகை

ஆன்ஜுட்ஸ் கார்ப்பரேஷன் அமெரிக்காவின் சர்வதேச கம்பெனிகளில் ஒன்று, அக்கம்பெனியானது லத்தீன் அமெரிக்க நாடுகளின் ஒன்றான பிராகுவேயில் ஒரு லட்சத்து 60 ஆயிரம் சதுர கிலோ மீட்டர் பரப்பளவில்— அந்நாட்டின் உலோகத் தாதுக்கள் உள்ள மொத்தப் பரப்பின் 40சதவிகிதத்தில் — கதிரியக்க உலோகத் தாதுக்களை எடுக்கும் உரிமை பெற்றுள்ளது.

பிராகுவேயை ஆளுகின்ற ஸ்ட்ரோஸ்நெர் என்னும் சர்வாதிகாரியின் ஆட்சி அக்கம்பெனிக்கு மிகுந்த சலுகை கொடுத்துள்ளது.

40வருடங்களுக்கு உலோக

(4-ம் பக்கம் பார்க்க)

# இந்தியாவில் பிரிட்டிஷ் தொழில் அதிபர்கள்

பிரிட்டிஷ் கம்பெனிகள் தங்களுடைய முதலீட்டை இந்தியாவில் அதிகரிக்கவும், இந்தியக் கம்பெனிகளுடன் சேர்ந்து மூன்ருவது உலக நாடுகளில் கூட்டுத தொழில் ஆரம்பிக்கவும் பிரிட்டிஷ் கம்பெனிகள் ஆர்வமுடன் உள்ளன என பிரிட்டிஷ் தொழில் கூட்டுறவு குழு தலைவர் ரால்ப்பேட்மேன் கூறியுள்ளார்.

18 தொழில் அதிபர்களைக் கொண்ட இக்குழு பல்வேறு பகுதிகளாக பிரிந்து சென்னை, பெங்களூர், திருச்சி, புனே ஆகிய நகரங்களுக்குச் சென்று அங்குள்ள இந்திய தொழில அதிபர்களைச் சந்தித்து பேசும் பொருட்டே இந்தியா வந்துள்ளது.

மேலும் எந்தெந்த தொழில்களில் மூலதனமிடலாம் என்பது பற்றி ஆராய்ந்து அதற்கேற்ற நடவடிக்கைகள் மேற்கொள்ளப்படும் என்றும் அவர் அறிவிததார்.

மேலும் இந்தியாவில் தொழிலுக்கான பருவ சூழ்நிலைகள் சாதகமாக இருபபதால் இந்தியாவில் முதலீடு செய்வதற்கான நிலைமைகள பிரகாசமாக உள்ளனஎன்றும் அவர் குறிப்பிட்டார்.

## அன்னிய முதலீடு

இரு நாடுகளும் மேற்கொள்ளும்எந்தவொருகூட்டுத் தொழிலும் இரு நாடுகளுக்கும் பயனளிக்குமா என்பதில் கவனம் செலுத்த வேண்டும் என்றும் ரால்ப்பேட்மேன் கூறினர்.

மேலும் இந்தியாவில் தொழில் நுணுக்கம் வளர்ச்சியடைய ஏராளமான அளவில் வெளிநாட்டு முதலீடு தேவைப் படுகிறது என தான் உணர்வதாகவும் அவர் அறிவித்தார்.

எக்னமிக் டைம்ஸ் பத்திரிகைக்கு அளித்த பேட்டியில் மேற்கண்டவாறு கூறினர்.

வர்த்தகசபையொன்றின் விவாதக கூட்டத்தில் 'வெளிநாட்டு மூலதனம்' என்பது பற்றி பேசினர்.

இந்தியாவுக்கும் பிரிட்டனுக்குமிடையேயானவர்த்தகத்திற்கும், கூட்டுத்தொழில்களுக்கும்நல்ல வாய்ப்புகள்ஏற்பட்டுள்ளன என்றும் அவர் கூறினர்.

மேலும் அன்னிய மூலதனங்கள் இந்தியாவுக்கு வருவது குறைந்ததற்கு காரணம வெளிநாட்டு மூலதனங்களுக்கான லாபம் குறைந்ததேஎன்ருர்ரால்ப்பேட்மேன.

மேலும் பிரிட்டன் இன்று அடைந்துள்ள முன்னேற்றத்தை தனியார்துறையின்றி அடைந்திருக்க முடியாது என்கிருர் பிரிட்டிஷ் தொழில் அதிபர்கள் குழுத் தலைவர் ரால்ப் பேட்மேன்.

## கட்டுப்பாடுகள் தவிர்ப்பு

வர்த்தகசபை சார்பில் நடைபெறற இக்கூட்டத்தை மத்திய அரசாங்கத்தின் கன இயந்திர அமைச்சகத்தின் செயலாளர் மேன்டோஷ் சோந்தி என்பவர் ஆரம்பித்து வைத்தார்.

அவர் பேசுகையில் இந்தியாவில் தொழில் நுணுக்க வளர்ச்சியை அதிகரிக்க வெளிநாட்டு மூலதனங்களை இந்தியா வரவேற்பதாக கூறினர்,

அவர் மேலும் பேசுகையில், வெளிநாட்டு மூலதனம் பங்குகொள்ளக்கூடிய தொழில் துறைகளில் வெளிநாட்டு மூலதனம, கூட்டுத்தொழில் ஆகியவைபற்றிய ஒப்பந்தங்கள் திட்டவட்டமாக வரையறுக்கப்பட்டுள்ளன. வெளிநாட்டு மூலதனங்களின் பேரில் எடுத்துச் செல்லப்படும்லாபங்கள், லாபப் பங்கீடுகள் மீதான கட்டுப்பாடுகள் விரிவான அளவில் தவிர்க்கப்பட்டுள்ளன. அன்னியச் செலாவணி நெருக்கடிக் காலக்கட்டங்களில்கூட அவ்வாறு தவிர்க்கப்பட்டுள்ளன என்றும் அவர்குறிப்பிட்டார்.

மேலும் ஒரு காலத்தில் இந்தியாவிற்குள் அன்னியமுதலீடுகள் குவிவதற்கு அனுமதிக்கப்பட்டதுபோலவே தற்போது அன்னிய முதலீட்டாளர்களும் உள்நாட்டு முதலீட்டாளர்களும் அனுமதிக்கப்படுகின்றனர் என்றும் அவர் குறிப்பிட்டார்.

முன்னுள் பொருளாதார விவகாரச் செயலாளர் பூதலிங்கம் இவ்விவாதத்தில் கலந்து கொண்டு பேசுகையில், பொருளாதாரம் வளர வளர; அன்னியச்செலாவணிகள் மீதான கட்டுப்பாடுகள் படிப்படியாக குறைக்க முடியும் என்றுகூறினர்,

## உயர்ந்த லாபம்

வழக்குரைஞரும் தொழில் அதிபருமான பலகிவாலா இவ் விவாதத்தில் கலந்துகொண்டு பேசும்போது. திறமைமிக்க தொழிலாளர்கள், மிததியான கச்சாப பொருட்கள், (அன்னிய முதலீடு பற்றி) அரசாங்கததின் முறையான கொள்கைகள், வரிகளுக்குப் பிறகும் உயர்ந்த லாபம ஆகியவை போன்ற காரணங்கள் இந்தியாவில் அன்னிய மூலதனங்கள் வருவதற்கான சாதகமான அம்சங்களாக உள்ளன என்று அவர் குறிப்பிட்டார்.

இவ்விவாதத்திற்கு ஏற்பாடு செய்த வர்த்தக சபையின் தலைவர் நந்தா என்பவர் பேசுகையில், இந்தியாவில் பொருளாதார வளர்ச்சி ஏற்பட்ட போதிலும் முக்கியத் தொழில் துறைகளின் வளர்ச்சிக்கு அன்னிய நாடுகளின் மூலதனமும், தொழில் நுணுக்கமும் இந்தியாவிற்கு ஏராளமாக தேவைப்படுகிறது என்று கூறினர்.

---

# வர்க்கப் பிரிவினைக்கு அடிப்படை

சுரண்டும் வர்க்கமாகவும்-சுரண்டப்படும் வர்க்கமாகவும்—ஆளும் வர்க்கமாகவும், ஒடுக்கப்பட்ட வர்க்கமாகவும் சமுதாயம்பிளவுண்டதானது, முற்காலத்தில் பொருளுற்பததியின் வளர்ச்சிப் போதாததாகவும் குறுகிய வரப்புக்குட்பட்டதாகவும் இருந்ததால் ஏற்பட்ட தவிர்க்க முடியாத விளைவாகும்.

"மொத்த சமூக உழைப்பால் கிடைக்கும் உற்பத்திப் பொருட்கள் எல்லோருடைய உயிர் வாழ்வுக்கும் வேண்டிய அத்தியாவசிய அளவைக்காட்டிலும் சொற்ப அளவே அதிகமாயிருக்கும்வரை—இதன் காரணமாய்ச் சமுதாயததின் உறுப்பினர்களில் மிகப் பெரும்பாலோரின் முழு நேரமும், அல்லது அநேகமாய் முழுநேரமும் உழைப்புக்காக வேண்டியிருக்கும் வரை— இந்தச் சமுதாயம் தவிர்க்க முடியாதவாறு வர்க்கங்களாய்ப் பிளவுற்றிருக்க வேண்டியதாயிற்று. முற்றிலும் உழைபபிலே மட்டும்ம ஈடுபட வேண்டிய கொத்தடிமைகளான மிகப் பெருவாரியுடன கூடவேநேரடியான பொருளுற்பத்திக்குரிய உழைப்பிலிருந்து விடுபட்ட ஒரு வர்க்கம் தோன்றி உழைப்பை நெறிப்படுத்தல்— அரசு, சட்டம், விஞ்ஞானம், கலை விவகாரங்கள் போன்ற சமுதாயத்தின் பொது அலுவலகளைக் கவனித்து வருகிறது. ஆகவே உழைப்பு பிரிவினை விதிதான் வர்க்கப் பிரிவினைக்கு அடிப்படை அமைகிறது. ஆனல் இந்த வர்க்கப்பிரிவினை பலாதகாரத்தாலும் கொள்ளையாலும் சூதுமுறையாலும் மோசடியாலும் நிலைநாட்டப்படவில்லை என்பதல்ல இதற்கு அர்த்தம். ஆதிக்க நிலை பெற்றதும்ஆளும் வர்க்கம் தொழிலாளி வர்க்கத்தின் செலவில தனது ஆதிக்கத்தை உறுதியாக்கிககொள்ளவில்லை எனறோ சமுதாயத்தில் தனக்கிருந்த தலைமைப் பதவியைப் பெருந்திரள் மக்கள் மீதான கொடும சுரண்டலாய் மாற்றிக் கொள்ளவில்லை என்ருே இதற்கு அர்த்தமில்லை,"

—பிரடெரிக் ஏங்கல்ஸ்

---

# சி.ஐ.டி.யூ வுடன் இணைக்க முடிவு

வடாற்காடு மாவட்ட அச்சுத் தொழிலாளர் சங்கப் பேரவைக் கூட்டம் அக் 15ல் துணைத் தலைவர் தோழர் முருகேசன் தலைமையில் நடந்தது.

ஆண்டு அறிக்கையை உதவிச் செயலாளர் விதணிகாசலமும், பொருளாளர் எஸ் ஆர் கணேசனும் வரவு-செலவு கணக்கையும் சமர்ப்பித்து அங்கீகரிக்கப்படடன.

இச்சங்கத்திற்கு புதிய நிர்வாகிகள் தேர்ந்தெடுக்கப் பட்டனர். இச்சங்கத்தை சி ஐ டியூவுடன் இணைப்பது என்று ஏகமனதாக தீர்மானிக்கப்பட்டது.

---

# மேச்சேரி விவசாயிகள் கூட்டத்தில் சங்கரய்யா

மேட்டூர் அணை மேச்சேரியில் புதிய சரஸ்வதி அரிசி மாவுமில்லில் நவ 1-ல் விவசாயிகள் சங்கக்கூட்டம் நடந்தது.

அகில இந்திய விவசாயிகள் சங்க . உதவித் தலைவரும் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் மாநிலசெயற்குழு உறுப்பினருமான தோழர் என். சங்கரய்யா இக்கூட்டத்தில் கலந்துகொண்டு இன்றைய அரசியல் நிலை பற்றி விளக்கினர். தொழிற்சங்க இயக்கமும் விவசாயிகள் சங்க இயக்கமும் எவ்வாறு ஒன்றுக்கு மற்றொன்று ஆதரவாக ஒத்துழைப்பாகத்திகழவேண்டும் என்பதை பல்வேறு எடுத்துக்காட்டுகளுடன் விவரித்தார். செங்கொடியின்—செங்கொடிச் சங்கத்தின் சிறப்பியல்புகளை எடுத்துரைத்தார்.

மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் பிரதேசக் கமிட்டி செயலாளர் தோழர் எம். ராஜகோபாலன் ஸ்தலப்பிரச்னைகளை தீர்மான வடிவில் சமர்ப்பித்துப் பேசினர்.

குடிநீர் வசதி, குடியிருக்கும் வீடுகளுக்கு வீட்டுமனைப் பட்டா, உட்பட 10 கோரிக்கைகள் அடங்கிய தீர்மானங்கள் நிறைவேற்றப் பட்டன.

நூற்றுக்கணக்கானேர் கலந்து கொண்டு சிறப்பித்த இக்கூட்டத்துக்கு தோழர் வைத்தியலிங்கம்தலைமை வகித்தார். மற்றும் தோழர்கள் எஸ் பி வெங்கிடாசலம்; பி தர்மலிங்கம் ஆகியோரும் பேசினர்.

# மேலூர் தாலுகா கரும்பு விவசாயிகள் கோரிக்கைகள்

மேலூர் தாலுகா சர்வ கட்சி கரும்பு விவசாயிகள் சங்க சார்பில் கிராமசாமி (மார்க்சிஸ்ட்). மூ கருப்பையா (காங்கிரஸ்) தலைமையில் 7பேர் கொண்ட தூதுக் குழு அக் 20ம தேதியன்று அலங்காநல்லூர் தேசிய கூட்டுறவு சர்க்கரை ஆலை தனி அதிகாரியைச் சந்தித்து கோரிக்

(4-ம் பக்கம் பார்க்க)

---




# மலைவாசி, அரிசன மக்களின் குறைகள் களையக் கோரிக்கை

ஐயா,

ஆத்தூர் கெங்கவல்லி யூனியனைச் சேர்ந்த மண்மலை பஞ்சாயத்தில் உள்ள மண் மலை. சேங்கட்டு. பாலக்காடு, ரெங்கநாதபுரம் ஆகிய கிராமங்களில் சுமார்500மலைவாசிக் குடும்பங்கள் உள்ளன. இக்குடும்பங்களைச் சேர்ந்த 2000 மக்களுக்கு புதிய உணவு கார்டுகள் வழங்கப்படவில்லை. பழைய உணவுக் கார்டுகளுக்கும் உணவு தான்யம் வழங்கப் படுவதும் இல்லை.

மண்மலை பஞ்சாயத்தில் உச்சிமேடு என்ற பகுதியில் அரிசனங்களுக்கு அரசு மூலமாக வீடு கட்டிக் கொள்ள நிலம் ஒதுக்கப்பட்டு சுமார் 40 குடும்பங்கள் வீடுகட்டி வசித்து வருகின்றனர். ஆனல் இவர்களுக்கு இன்னும் மின்சார வசதிகள் செய்யப்படாததால் அப்பகுதி இருளடைந்து கிடக்கிறது. தவிர, உச்சிமேட்டு மக்களுக்கு குடிநீர் வசதி செய்து கொடுபபதாகச் சொல்லி குழாய்க் கிணறுகள் (போர் வெல்) போட அனுமதி அளிக்கப்பட்டது. ஆனல் இந்தக் குழாய்க் கிணற்றை சுமார் அரைமைல் தூரத்தில்உள்ள குடியானவர் (மேல்ஜாதியினர்) தெருவில் அமைத்துக்கொண்டு அரிசன மக்கள் வசிக்கும் பகுதியில குழாய்க் கிணற்றை அமைக்கவில்லை. இதனல் குடிநீர் கிடைக்காமலும் இப்பகுதி அரிஜன மக்கள் மிகவும் கஷ்டப்படுகிருர்கள்.

மண்மலைப் பஞ்சாயத்தைச் சேர்ந்த பாலக்காடு; ரெங்கநாதபுரம், உச்சிமேடு, மூனுறுமங்களம், போஜராசாமங்களம் ஆகியபகுதிகளில் வசிக்கும்மலைவாசி மககளும், அரிஜன மக்களும் தகரப்புதூர் மெயின் ரோடு செல்வதற்காக வேண்டி ஒரு பொதுப்பாதை இருந்து வந்தது. இப்போது, வசதி படைத்த சிலர் தமது தன்னலம் கருதி ஆக்கிரமிப்புச் செய்து அப்பாதையை அடைதது விட்டனர். இதனல் போக்குவரத்து வசதி இன்றியும் அப்பகுதி மக்கள் அவதிப்படுகின்றனர்.

எனவே. இப்பகுதி மக்களின் உணவுக்காக, குடிநீர், மின்வசதி, போக்குவரத்து ஆகிய பிரச்னைகள் பற்றி சம்பந்தப்பட்ட அதிகாரிகளும், அரசும் தக்க நடவடிக்கை எடுத்து குறைகளைக் களைய வேண்டுகிறேன்.

இவண்

என். துரைச்சாமி

ரங்காநாதபுரம்

## இந்திய சுதந்திரப் போராட்ட வரலாறு

((36))

# "ஹோம்ரூல் லீக்"

இ.எம்.எஸ்.நம்பூதிரிபாட்

ஆரம்பத்தில் காங்கிரசிலுள்ள மிதவாதிகள் தீவிரவாதிகளை அகற்றும்வகையில் கட்சியின் அமைப்பு விதிகளிலேயே சில ஏற்பாடுகளைச் செய்து வைத்திருந்தார்கள். ஆனால், இப்போதைய மாறிய சூழ்நிலையில, தீவிரவாதிகளையும் காங்கிரசிற்குள் சேர்த்து கட்சியில் ஒற்றுமை ஏற்படுத்துவதற்கான முயற்சிகள் ஆரம்பிக்கப்பட்டதல்லவா? அப்படியானால் காங்கிரஸ் கட்சியின் நியதிகளிலும் அமைப்பு விதிகளிலும் மாற்றம் ஏற்படுத்த வேண்டிய நிலை ஏற்படுகிறது.

ஆனால், தீவிரவாதிகளும் ஸ்தாபனத்திற்குள் சேர்ந்து இயங்கும் வகையில் கட்சியின் அமைப்பு விதிகளிலும் நியதிகளிலும் மாற்றம் ஏற்படுத்தினால், ஸ்தாபனம் முழுமையாக தீவிரவாதிகளின் கட்டுப்பாட்டிற்குள் வந்துவிடும் என்ற அச்சம்தான மிதவாதிகளை அலட்டிக் கொண்டே இருந்தது. மிதவாதிகளின் இந்த அச்சம் நியாயமற்றதல்ல என்பதனை தொடர்ந்து நடந்த நிகழ்ச்சிகள் நிரூபிக்கவும் செய்தன.

காங்கிரசில் பிளவு ஏற்பட்ட பிறகு, முதன முதலாக காங்கிரஸ் மாநாட்டில் கலந்து கொள்ளச் (ஒற்றுமைக்குப் பின்பு) சென்ற திலகருக்கு வழி நெடுக மக்களும் மாநாட்டுப் பிரதிநிதிகளும் ஒரு மாபெரும் வரவேற்பை அளித்தார்கள். இந்த நிகழ்ச்சி மக்களிடையேயும், காங்கிரஸ் ஊழியர்களிடையேயும் திலகருக்கும், தீவிரவாதிகளுக்கும் உள்ள ஆழமான செல்வாக்கை மீண்டும் எடுத்துக் காட்டும் வண்ணம் இருந்தது.

இந்த நிகழ்ச்சி நடந்த மறுவருடம் கூடிய காங்கிரஸ் மாநாட்டில், தீவிரவாதிகளின கருத்துக்கு ஆதரவு அளித்து வந்த அன்னிபெசன்ட் அம்மையார் மாநாட்டுத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

திலகர், லஜபதிராய் போன்ற தீவிரவாதத தலைவர்களை மாநாட்டுத் தலைமை பீடத்திற்கு தேர்ந்தெடுப்பதற்காக நடத்தப்பட்ட முயற்சிகளையெல்லாம் பல வருடங்களாக முறியடித்து, தலைமைப் பதவியை ஏகபோகமாக தங்கள் கையில் மித்வாதிகள் தக்க வைத்துக் கொண்டிருந்தார்கள்.

### மிதவாதிகளின் தவறான அரசியல் கணிப்பு

ஆனால், இப்போது ஒரு தீவிரவாதக் கருத்துக் கொண்ட அன்னிபெசனட் அம்மையார் மாநாட்டுத் தலைமைப் பதவிக்கு தேர்ந்தெடுக்கப்படும் அளவுக்கு நிலைமை மாறிவிட்டது. இது யுத்த கால சூழ்நிலையில் ஏற்பட்டுக் கொண்டிருந்த அரசியல் மாற்றங்களின் மிகப்பெரும் எடுத்துக் காட்டாகும்.

இந்த நிகழ்ச்சியானது, மிதவாதிகளை மட்டுமின்றி, ஆங்கிலேய ஆட்சியாளர்களையும் மிகவும் புண்படுத்திய ஒரு நிகழ்ச்சியாகும். 1913-ஆம் வருடம் இந்திய அரசாங்கத்தின் உள் விவகார இலாகா உறுப்பினர் ஓர் இரகசிய அறிக்கையில் இதுபற்றி பின்வருமாறு குறிப்பிட்டுள்ளார்:—

"இன்றைய நிலைமை மிகச் சிரமம் நிறைந்ததாகும். அரசியல் விவகாரங்களில் கருத்துப் பரிமாற்றம் நடத்துகின்ற (அரசியல் தெளிவுள்ள) மக்கள் பிரிவினர் மத்தியில், மிதவாதிகளுக்கு எவ்வித ஆதாரமும் கிடையாது. இப்படிப்பட்ட அரசியல் தெளிவுள்ள மக்களுக்கு திலகரும் அன்னிபெசன்டும்தான் தலைமை தாங்குகிறார்கள்."

இந்த அறிக்கைதான், மிதவாதிகளை மகிழ்ச்சியூட்டும் வகையில் (திருப்திப்படுத்தும் வகையில்) சில ஆட்சிச் சீர்திருத்தங்களைக் கொண்டுவர இந்திய அரசாங்கத்தைத் தூண்டியது

ஆனால், மிதவாதிகளின் அரசியல்கணிப்பில் ஒரு தவறு ஏற்பட்டிருந்தது. அதாவது, தீவிரவாதிகளை மீண்டும் காங்கிரசில் சேர்க்காமலிருந்தால் காரியங்கள் சரிப்பட்டுவிடும் என்றுதான் மிதவாதிகள் கணித்திருந்தார்கள்.

இந்தக் கணிப்பு முற்றிலும் அடிப்படையற்றதாக இருந்தது. ஏனென்றால், அன்றைய காலக் கட்டத்தில், காங்கிரசிற்கு வெளியே நின்று கொண்டாவது தங்களது அரசியல் கருத்துக்களை பரவலாக பிரச்சாரம் செய்ய தீவிரவாதிகளுக்கு முடிந்தது! அது மட்டுமின்றி. ஆட்சியாளர்கள் மீது இயன்றவரை நிர்ப்பந்தம் செலுத்தி தங்களின் அதிகார வரையறையை விரிவுபடுத்த, வேரூன்றிய ஒரு முதலாளி வர்க்கமும் வளர்ச்சி பெற்றிருந்தது.

எனவே, சாத்தியப்பட்டால் காங்கிரசிற்குள்ளேயே நுழைந்தும், தேவை ஏற்பட்டால் காங்கிரசிற்கு வெளியே நின்றும் தங்களது அரசியல் கருத்துப்படி செயல்பட தீவிரவாதிகளால் முடிந்தது.

இப்படிப்பட்ட தீவிரவாத நடவடிக்கைகளின் ஸ்தாபன வடிவமாக, "ஹோம்ரூல் லீக்" என்ற பெயரில் ஒரு புதிய அரசியல் இயக்கம் இந்தக் காலக் கட்டத்தில், அரசியல் அரங்கிற்குள் நுழைந்தது. சரியாகச் சொல்லப்போனால் "ஹோம்ரூல் லீக்" என்ற பெயரில் ஓர் இயக்கமல்ல; அந்தப் பெயரில் இரண்டு இயக்கங்கள் 1916-ஆம் வருடம் வடிவம் பெற்றுவிட்டன. இதில்—ஒன்று மகாராஷ்டிரத்தில் திலகரின் தலைமையிலும், மற்றொன்று—மதராஸில் (சென்னை) அன்னிபெசன்ட் அம்மையாரின் தலைமையிலும் துவங்கப்பட்டன.

திலகர் 1914-ஆம் வருடத்தின் நடுப்பகுதியில்தான் சிறையிலிருந்து விடுதலையாகி வெளியே வந்தார். ஆறு வருடங்களுக்குமுன்பு தாம் சிறைக்குச் செல்லும் சமயத்தில் இருந்ததைவிட முற்றிலும் வேறுபட்ட நிலைமைகள்தான் இப்போது நாட்டில் இருந்து வருகிறது என்பதனை திலகர் புரிந்து கொண்டார். எனவே, புதிய மாறிய நிலைமைகளுக்கேற்ப தம்முடைய அணுகுமுறையிலும் தம் கட்சியின அணுகுமுறையிலும் மாற்றம் ஏற்படுத்த வேண்டுமென அவர் யோசனை கூறினார், இந்த அரசியல்நிலை மாற்றத்தின் பிரதான மான உள்ளடக்கம் யாதெனில், "இங்கிலாந்தின் தேவை இந்தியாவின் அவசரத் தேவையாகும்" என்ற பூர்ஷ்வாப் பார்வையாகும்.

'சுயராஜ்யம்' என்ற இலட்சியத்தை அடைவதற்காக பகிஷ்காரம் போன்ற போராட்ட முறைகளைக் கையாளவேண்டுமென வாதிட்டுக் கொண்டுதானே, திலகர் மிதவாத அரசியலை எதிர்த்து தீவிரவாத அரசியலை முன் கொண்டு வந்தார்? எனவே இப்போதும் திலகர் அப்படிப்பட்ட கொள்கையைத்தான் கடைபிடிப்பார் என்றே பெரும்பாலும் கருதப்பட்டது. அதாவது, முன் எப்பொழுதையும்விட இந்தியர்களின் உதவியை இந்த போர்க்கால சூழ்நிலையில் இங்கிலாந்து மிக அதிகமாக எதிர்பார்ப்பதால், இந்த நெருக்கடியான தருணத்தில் எவ்வித உதவியும் ஒத்துழைப்பும் அளிக்காமல் அரசாங்கத்தை எதிர்க்க வேண்டுமென்று திலகர் அறைகூவல் விடுவார் என பலரும் எதிர்பார்த்தனர். ஆனால், இதற்கு முற்றிலும் மாறுபட்ட ஒரு நிலையைத்தான் திலகர் மேற்கொண்டார். போரில் இங்கிலாந்தின் வெற்றிக்குத் தேவையான எல்லா ஒத்துழைப்பும் தருவதற்கு தாம் தயாராக இருப்பதாக திலகர் வெளிப்படையாக அறிவித்தார். போரில் கலந்துகொள்ளும் வகையில் "மக்கள் சேனை". ஒன்றை அமைக்க வேண்டுமென்றும், அந்த சேனையில் பெருமளவில் ஆட்களைச் சேர்க்க வேண்டுமென்றும் அவர் யோசனை கூறினார். ஆங்கிலேய ஆட்சியின்கீழ் நிராயுதபாணிகளாக ஆக்கப்பட்டிருக்கும் இந்திய மக்களுக்கு, ஆயுதப்பயிற்சியும் போர்ப்பயிற்சியும் கிடைப்பது தாய்நாட்டின் எதிர்காலத்தை வலுப்படுத்தவும் வளப்படுத்தவும் பேருதவிபுரியுமென திலகர் எண்ணினார்—இதன்படி, பெருமளவில் இராணுவத்தில் ஆள் சேர்ப்பதற்கான முயற்சியில் திலகர் நேரடியாக ஈடுபட்டார்.

ஆனால், இது திலகரின் அணுகுமுறையின் ஒரு புறம் மட்டுமே. இதன் மறுபுறம் தான், அவர் முன்நின்று அமைத்த "ஹோம் ரூல் இயக்கம்". இங்கிலாந்தின் யுத்த நடவடிக்கைகளில் முழுமையாகப் பங்கு கொள்ள இந்திய மக்களுக்கு உற்சாகம் ஏற்பட வேண்டுமாயின், போரின் வெற்றிகரமான முடிவு, தங்களின் அரசியல் இலட்சியத்தை அடைவதற்கு உதவியாக இருக்குமென்ற நம்பிக்கை அவர்களுக்கு ஏற்பட வேண்டும்; இந்திய மக்களால நிர்வகிக்கப்படும உள்ளாட்சி என்ற பொருளில் 'ஹோம் ரூல்' அனுமதிக்கப்பட வேண்டும—இதுதான் திலகர் எழுப்பிய வாதம்.

மேற்கண்ட இலட்சியத்தின்படி, இந்திய 'ஹோம் ரூல் லீக்' என்ற ஒரு ஸ்தாபனம் 1916-ம் வருடம் ஏப்ரல் 26—29 ஆகிய தேதிகளில் மகாராஷ்டிரத்தில் உருவமடைந்தது. இதற்கு முழுமையாகத்தலைமை வகித்தவர் திலகரே. இருந்தபோதிலும் இந்த ஸ்தாபனத்தில் அவர் எந்தப் பதவியையும வகிக்கவில்லை. தம்முடைய பத்திரிகைகள் போன்றவற்றின் வாயிலாக "ஹோம ரூல்" என்ற கொள்கைக்கு மிதமிஞ்சிய பிரச்சாரம நடத்துவதற்கு அவர் முயற்சித்துக் கொண்டிருந்தார். இப்படிபட்ட ஒரு ஸ்தாபனத்திற்கு வடிவம் அளிப்பதன் தேவையை விளக்கி திலகர் எழுதியதாவது:

"ஹோம்ரூல்" கொள்கைக்கு ஆதரவாக வெகுஜனக் கருத்தை உருவாக்குவதற்கும் அதற்காக போராட்டம் நடத்தவும உரிய நேரம் வந்துவிட்டது என்பது பொதுவாக ஏற்றுக் கொள்ளப்பட்டுவிட்டது. இந்த வேலையைப் பொறுப்புடன் ஏற்றெடுக்கவேண்டிய கடமை இயற்கையாகவே காங்கிரசைச் சார்ந்ததாகும். ஆனால்சுயாட்சி சம்பந்தமாக ஒரு திட்டம் தயாரிக்கின்ற வேலையில் காங்கிரஸ் ஈடுபட்டுள்ளது என்ற காரணத்தைக்கூறி, மிதவாதிகள் ஒரு 'ஹோம்ரூல் லீக்' அமைப்பதற்கான யோசனையை நிராகரிக்கிறார்கள். இந்தியர்களால் நிர்வகிக்கப்படும் உள்ளாட்சி (ஹோம் ரூல்' சம்பந்தமான திட்டத்தை உருவாக்கி. அதன் அரசியல வெற்றிக்காக ஒன்றுபட்டு செயல்படத் திறனற்ற ஒரு பெரிய ஒற்றுமையில்லாத ஸ்தாபனம்தான் காங்கிரஸ் எனவே இதற்கான ஆரம்ப வேலைகளைச் செய்ய யாராவது முன்வர வேண்டும.

இந்த விஷயத்தில் மேற்கொண்டு எவ்விதமான காலதாமதமும் ஏற்படுத்தவே கூடாது. இதற்காக முன்நின்று செயல்படக்கூடிய ஒரு ஸ்தாபனமாக ஹோம்ரூல் இயங்கும்'

"ஹோம் ரூல் லீக்" ஸ்தாபிக்க வேண்டுமென்ற யோசனையை மிதவாதிகள் நிராகரித்ததை திலகர் குறிப்பிடுகிறார் அல்லவா? அந்த நிகழ்ச்சியாவது:

திலகர் சிறையிலிருந்து விடுதலையாகி வெளிவருவதற்கு முன்பே அன்னிபெசன்ட் அம்மையார் மதராஸை மையமாகக்கொண்டு உள்ளாட்சிக்கான (ஹோம ரூல்) போராட்டத்தை ஆரம்பித்தார். இந்தியாவில மட்டுமின்றி, இங்கிலாந்திலும் அவர் இதற்கான நடவடிக்கைகளை நடத்தி வந்தார். ஆனால், திருமதிபெசன்ட் அம்மையார் திலகரைப்போல், காங்கிரசிற்கு வெளியேநின்று செயல்படும் ஒரு தீவிரவாதியல்ல அவர் காங்கிரசில் ஒரு அங்கீகரிக்கப்பட்ட தலைவியாக இருந்தார். எனவே, உள்ளாட்சிக்காக செயல்பட வேண்டுமென்ற நோக்கத்துடன் ஒரு தனி ஸ்தாபனம் (ஹோம்ரூல் லீக்) அமைக்க வேண்டுமென்று யோசனை கூறுகின்ற ஒரு தீர்மானத்தை பெசன்ட் அம்மையார் காங்கிரஸ் மாநாட்டில் முன்வைத்தார்.

இந்த தீர்மானத்தை மிதவாதிகளின் தலைமையிலிருந்த காங்கிரஸ் நிராகரித்து விட்டது. அதற்குப்பதிலாக 'சுயாட்சித் திட்டம் ஒன்றை தயாரிப்பதற்கான' ஒரு குழுவை காங்கிரஸ் நியமித்தது. அந்தக் குழுவில் பெசன்ட் அம்மையாரையும் ஓர் உறுப்பினராக நியமித்தது. அந்தக் குழுவின் நடவடிக்கைகள முற்றுப் பெறும்வரை காங்கிரஸ் கட்சியின் இந்தத் தீர்மானத்திற்குதான் கட்டுபடவேண்டியது அம்மையாரின் கடமையாகிவிட்டது. அந்தக்குழுவின் வேலைகள் முடிந்ததும், காங்கிரசின் தீர்மானங்களுக்கு குந்தகம் ஏற்படாத வகையில் "ஹோம் ரூல் லீக்" ஸ்தாபனத்தை தானே அமைப்பதற்கான சுதந்திரம் தமக்கு உண்டென்று அவர் எண்ணினார். இதன்படி 1916 ஆம் வருடம் செப்டம்பர் மாதம் மதராசில் "ஹோம் ரூல லீக்" அமைக்கப்பட்டது,

இவ்வாறு 'ஹோம்ரூல் லீக்' இரண்டு தலைமையின கீழ் இரண்டு இணை ஸ்தாபனங்களாக உருவெடுத்தன. இருந்தபோதிலும இவை இரண்டின் நோக்கங்களும், இலட்சியங்களும், அடிப்படையான செயல்திட்டங்களும ஒன்றாகத்தான் இருந்தன. "பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தின் பிரிக்கமுடியாத பகுதியாக, அதன் வரையறைக்குள் நின்றுகொண்டே இயன்ற அளவு அதிகமான சுயாட்சி உரிமைகள் இந்தியாவுக்குக் கிட்ட வேண்டும்," இந்தக் கோரிக்கையின பின்னால இந்திய மக்கள் அனைவரையும் அணிதிரட்டி ஒரு வெகுஜனப் போராட்டத்தை ஆரம்பிக்க வேண்டும்; இந்தப் போராட்டத்தின் வீச்சு இங்கிலாந்தின் உள்நாட்டு அரசியலில் எதிரொலிக்க வேண்டும்—இதுதான் இந்த ஸ்தாபனங்களின இலட்சியம். இதற்குத் தேவையான பிரச்சாரங்களையும், நடவடிக்கைகளையும்தான் இந்த இரண்டு ஸ்தாபனங்களும் நடத்தி வந்தன.

—(தொடரும்)

# சர்வதேச தொழிலாளர் ஸ்தாபனம் நடத்திய வேலைவாய்ப்பு மாநாடு

சர்வதேசிய தொழிலாளர் ஸ்தாபனம் சார்பில் 1976 ஜூன் மாதம் ஜெனீவா நகரில் உலக வேலைவாய்ப்பு மாநாடு நடந்தது. 13 நாட்கள் நடைபெற்ற இம்மாநாட்டில் 1350 பிரதிநிதிகள் பங்கேற்றனர். டுனீசியா நாட்டின் சமுதாயத்துறை அமைச்சர் திரு. முகமது என்னுக்கர் மாநாட்டிற்கு தலைமை வகித்தார், அரசாங்கத்தரப்புஉதவி தலைவரான திரு. கேப்ரியல் வெண்டேஜோல் (பிரான்ஸ்), முதலாளிகள் தரப்பு உதவித் தலைவரான திரு ஃபெர்னண்டோ ராமோஸ் (மெக்ஸிகோ) தொழிலாளர் தரப்பு உதவித் தலைவரான திரு சிரில்பிளான்ட் ஆகியோர் மாநாட்டுத் தலைவருக்கு துணைபுரிந்தனர். மொத்தம் 80 மணி நேரம் நடந்த விவாதத்தில் பல்வேறு நாடுகளைச் சேர்ந்த 208 பிரதிநிதிகள் பங்கேற்றனர்.

வளரும் நாடுகளின் மக்கட் தொகையில் சுமார் மூன்றிலொரு பங்கினர் வேலையில்லாத் திண்டாட்டம், மோசமான வறுமை ஆகிய கொடிய (கூண்டிற்குள்) வட்டத்திற்குள் சிக்கியிருப்பதாக மாநாடு குறிப்பிட்டது. கி.பி. 2000 ஆம் ஆண்டுக்குள் பலனுள்ள — உற்பத்தியுடன் இணைந்த வேலை வாய்ப்பு ஏற்படுத்தப்படாவிடில், மேலும் நூறுகோடி மக்கள் அதே கூண்டில் சிக்க நேரிடும்,

### விரைவான மாறுதல்கள்

இந்த நூற்றூண்டின்இறுதியில் கைவிடப்படும் மனித குலத்தின் மூன்றில் ஒரு பகுதியினரைக் காக்கவேண்டி பேரார்வமிக்க நடைமுறைத் திட்டம் ஒன்றை மாநாடு தயாரித்தது. தேசிய முன்னேற்றத்தின் முன்னோடியாக வேலை வாய்ப்பை ஏற்படுத்துவதை தார்மீகக் கடமையாகக் கொள்ளவேண்டும் என்று அரசாங்கங்களுக்கு மாநாட்டின் திட்டம் சொல்லுகிறது. உற்பத்தியுடன் இணைந்த வேலை வாய்ப்புஒன்றுதான் மக்களுக்கு தேவைக்கேற்ற உணவு, போதுமான உறைவிடம், உடை மற்றும் சிறந்த தண்ணீர் விநியோகம், சுகாதாரம், கல்வி, வைத்தியப் பாதுகாப்பு போன்ற அடிப்படைத் தேவைகளை உறுதி செய்யும் என்றும் மாநாடு சுட்டிக்காட்டியது,

''பொருளாதார வளர்ச்சியின் பாணியை மாற்ருமலும் விரைவுபடுத்தாமலும் அடிப்படைத் தேவைகளில் வளரும் நாடுகளில் திருப்தி அடைய முடியாது'' என்று மாநாடு நிறைவேற்றியுள்ள நடைமுறைத் திட்டத்தில் கூறப்பட்டது.

''சொத்துக்களின் மறுவிநியோகம்—குறிப்பாக நிலம்—சில அம்சங்களில் இயற்கை ஆதாரங்களை முழுமையாக தேசியக் கட்டுப்பாட்டுக்குள் கொண்டுவருவது, செல்வ வரி விதிப்பு போன்றவை உட்பட சமூக அமைப்பில் விரைவான மாறுதல்கள் அடிக்கடி—ஒன்றன்பின் ஒன்ருகத் தேவைப்படுகிறது,'' என்றும் அத்திட்டத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது.

### வறுமைக்கோட்டிற்கும் கீழே வாழ்க்கை

சர்வதேசத் தொழிலாளர் ஸ்தாபனத்தின் பொது இயக்குநர் திரு. பிரான்சிஸ் பிளாஞ்சார்டு தனது முடிவுரையில் குறிப்பிடுகிருர்:

''ஒவ்வொரு நாட்டிற்கும் உலக சமுதாயம் முழுமைக்கும் நீங்கள் இப்போது கூறியிருப்பது என்ன?

''நூறுகோடி மக்களை வேதனைக்காளாக்கிக் கொண்டிருக்கும் தாங்க முடியாத வறுமை கி. பி. 2000 ஆண்டு இறுதிக்குள் மறையும் என்பதை உறுதிசெய்யும் வகையில் உங்களது கொள்கைகளை மாற்றி அமையுங்கள். அதற்காகவேண்டி அனைத்து மக்களுடைய தேவைகளைப் பூர்த்தி செய்யுங்கள்.'

''வேலையின்மையின் அளவையும் வேலைப் பற்ருக்குறையின் அளவையும் குறைப்பது என்ற இடைக்காலக் குறிக்கோளை உள்ளடக்கிய — இந்த நூற்ருண்டின் குறிக்கோள் முழு வேலைவாய்ப்புதான், வேலையில்லாத் திண்டாட்டத்துக்கும் வறுமைக்கும் எதிரான மிகப்பெரும் தாக்குதலின் முதன்மைக் கருவி ஆகும்.

வேலைவாய்ப்பு பற்றிய இப்படிப்பட்ட மாநாடு ஒன்றைக்கூட்டியசர்வதேச தொழிலாளர் ஸ்தாபனத்தின் முயற்சி பாராட்டுக்குரியதாகும். வளரும் நாடுகள், வளராத— வளர்ச்சி குன்றிய நாடுகள் உள்ளிட்ட முதலாளித்துவ உலகை வதைத்துக் கொண்டிருக்கும் இருபெரும் பிரச்சினைகள் வேலையின்மையும், வறுமையும் ஆகும். இந்தியாவில் இவ்விரு பிரச்சினைகள் அச்சந்தரும் வகையில் பயங்கரமான விகிதத்தில் அதிகரித்துக் கொண்டிருக்கின்றன. வேலைகோரி, வேலைவாய்ப்பு அலுவலகங்களில் பதிவுசெய்து கொண்டிருப்போர் சுமார் ஒரு கோடிப் பேர்; அவர்களில் படித்த வேலையில்லாதோர், 40 இலட்சம் பேர். வேலையில்லாதோர், மற்றுமபற்ருக்குறை வேலையில் இருப்போர்களது எண்ணிக்கை சுமார் 5 கோடி என்று மதிப்பிடப்பட்டிருக்கிறது. நமது நாட்டின்மக்கட் தொகையிம் 40 சதவீதம பேர் வறுமைகோட்டிற்கும் கீழான நிலையில் வாழ்கின்றனர். அதாவது, அவர்கள் போதுமான உணவு, பொருத்தமான உறைவிடம், உடை ஆகியன மறுக்கப்பட்டிருக்கிருர்கள்.

### வேலையின்மை எப்போது தீரும்?

முதலாளித்துவ நாடுகளில் வேலையின்மை அதிகரித்து வருவது ஏன்? சோசலிச நாடுகளில் வேலையில்லாப் பிரச்னை தீர்க்கப்பட்டு, அங்கு முழு வேலைவாய்ப்பு உறுதியாக்கப்பட்டிருப்பது ஏன்?என்ற அடிப்படையானகேள்விகள் குறித்து சில வெளிப்படையான காரணங்களால், சர்வதேசிய தொழிலாளர் ஸ்தாபனத்தின் இம்மாநாடு விவாதிக்க முடியவில்லை. வேலையின்மைப்பிரச்னை என்பது முதலாளித்துவப் பாதையில் இயல்பாகவே உள்ளடங்கியது, இரண்டறக் கலந்திருப்பது, தற்போதைய முதலாளித்துவச் சமுதாய அமைப்பு மாற்றப்பட்டாலொழிய இந்த வேலையில்லாத் திண்டாட்டப் பிரச்னையைத் தீர்க்க முடியாது. சோசலிசம் ஸ்தாபிக்கப்பட்டாலொழிய இப்பிரச்சினையில் வேறெதுவும் செய்யமுடியாது என்று இதற்கு அர்த்தமில்லை. ஆனல், அரசாங்கத்தால் பின்பற்றப்படும் கொள்கையானது அதிக வேலைவாய்ப்புக்களை உருவாக்குவதற்குப் பதிலாக வேலைவாய்ப்பின்மையை ஏற்படுத்தும் முறையைத் துரிதப்படுத்திக் கொண்டிருக்கிறது. அதிகாரப்பூர்வமான புள்ளி விவரங்களிலிருந்துகூட இதை நாம் அறிய முடியும். அண்மைக் காலங்களில்கூட—ஆட்குறைப்பு—கதவடைப்பு, 'லே-ஆப்' ஆகியவை அதிகரித்து வருகின்றன, ஆகவே அரசாங்கத்தால் பின்பற்றப்படும் கொள்கையில் மாறுதல் உண்டாக்க வேண்டும் என்பதே— இன்றைய தேவை! சர்வதேச தொழிலாளர் ஸ்தாபனமாநாடும் இந்த உண்மையை அங்கீகரித்துள்ளது.

சர்வதேச தொழிலாளர் ஸ்தாபனத்தில் இந்தியா ஓர் உறுப்பு நாடாகும். எனவே, இந்தப் பிரச்னையில் கவனம் செலுத்தவும் தனது கொள்கையில் மாற்றம் ஏற்படுத்துவதற்கும் நமது அரசாங்கத்துக்கு இது சரியான தருணம்.

நன்றி: 'ஒர்க்கிங் கிளாஸ்' 1976, அக்டோபர் இதழ்

# தொழில்களை நவீனப்படுத்த அரசு உதவி

சணல், பஞ்சாலை, சீனி, சிமெண்ட், என்சினியரிங்ஆகிய 5 முக்கியத் தொழில்களையும் நவீனப்படுத்துவதற்கு 200 கோடி ரூபாய் அளிப்பது என மத்திய அரசாங்கம் இறுதி முடிவெடுத்துள்ளது.

நவம்பர் 2-ல் நிதிஅமைச்சர் சுப்ரமணியம் தலைமையில் தொழில் அமைச்சர் டி. ஏ பை வர்த்தக அமைச்சர் சட்டோபாத்யாயா, வருவாய், பேங்கிங் அமைச்சர் பிரணப்முகர்ஜி மற்றும் ரிசர்வ்பேர்ங்க்கவர்னர் ஏனைய அரசாங்க நிதி ஸ்தாபன தலைவர்கள் கலந்து கொண்ட கூட்டத்தில் இம் முடிவு எடுக்கப்பட்டது.

அம்முக்கிய ஐந்து தொழில்களிலும் ஏராளமான தொழிற்சாலைகள், பழைய இயந்திரங்கள் காரணமாக நலிவுற்ற தொழிற்சாலைகளாகும் அபாயம் உள்ளது. எனவே,அத்தொழிற்சாலைகளை நவீனப்படுத்தும்பொருட்டு, நவீன இயந்திரங்கள் பொருத்துவதற்கு இந்திய தொழில் வளர்ச்சி பேங்கு மூலம் நிதி உதவி அளிப்பதென தீர்மானிக்கப்பட்டுள்ளது,

அவ்வாறு அளிக்கப்படும் கடன் உதவிகளுக்கு சலுகை அடிப்படையில் ஏழரை சதவீதவட்டியே வசூலிக்கப்படும். வசூலிக்கப்படுவதற்கான தவணைக் காலம் 12 வருடம் முதல் 15 வருடமாகும்.

---

வடாற்காடு மாவட்ட

## முற்போக்கு எழுத்தாளர் சங்க முதல் மாநாடு

28—11—76 ஞாயிறு மாலை

வேலூர் டவுன் ஹாலில்

நடைபெறும்

கே. முத்தையா

ச. செந்தில்நாதன்

தணிகைச் செல்வன்

சு. சம்பத்குமார்

மற்றும் பலர் பங்கேற்பர்

## கரும்பு விவசாயிகள்...

(2ம் பக்க தொடர்ச்சி)

கை மகஜர் ஒன்றைசமர்ப்பித்து பேசியதாவது:

1976—77ஆம் ஆண்டுச் சீசனுக்கு கரும்பு டன்னுக்கு ரூ 150 கொடுப்பதோடு லாரி வாடகையையும் ஆலை நிர்வாகமே தரவேண்டும் என்றும், ஒவ்வொரு ஆண்டும் தீபாவளிக்கு இரு வாரத்திற்கு முன்பே லாபவிகிதப் பங்கை கரும்பு விவசாயிகளுக்குப் பிரித்து கொடுத்துவிட வேண்டும் என்றும் அம்மகஜரில் கோரப்பட்டிருந்தது,

அழகர்கோவில்—சத்திரப்பட்டி குறுக்கு ரோட்டை செப்பனிடுதல, வறட்சி நீடிப்பதால் போரிங் செட்டுகள் போட்டுத் தருதல், தீவிரகரும்பு விவசாயிகளை அபிவிருத்தி அடைந்த கரும்பாலைப் பகுதிக்கு அனுப்பி பயிற்றுவித்தல், வருடாந்திர மகாசபைக் கூட்டுதல் ஆகிய கோரிக்கைகளும் கூறப்பட்டிருந்தன.

தவிர சர்க்கரை ஆலைக் கழிவுப் பொருட்களை உரத்திற்கு தேவைப்படும் விவசாயிகளுக்கு லாரி முலம் ஆலை நிர்வாகமே அனுப்பி, அதற்குரிய தொகையை, கரும்புபணத்தில் சரிக்கட்டிக்கொள்ள வேண்டும் என்றும் கோரப்பட்டுள்ளது.

இத்தூதுக்குழுவில் காஞ்சீவனம, பெரியகருப்பன (தேசிய காங்கிரஸ்). மீனுட்சி சுந்தரம்,எஸ்.மதார்(சுயேட்சை) வெள்ளையர்த்தா (அ தி மு க) ஆகியோரும் சென்றனர்.

## பீகிங்கில் நவம்பர் புரட்சி விழா

ரஷியாவில் நடைபெற்ற நவம்பர் புரட்சியின் 59 வது வருடவிழா, மக்கள் சீனத்தின் தலைநகர் பீகிங்கில் கொண்டாடப்பட்டது. இவ்விழாவை இரு சீன நட்புறவுக் கழகங்கள் நடத்தின என நவசீன செய்தி ஸ்தாபனம் நவம்பர் 3-ல் அறிவித்துள்ளது.

அச்செய்தியின்படி வெளிநாடுகளுடனை நட்புறவு மக்கள் அமைப்பும் சீன—சோவியத் நட்புறவு அமைப்பும் இவ்விழாவை கூட்டாக நடத்தியுள்ளன.

பீகிங்கில் நடைபெற்ற அவ்விழாவினையொட்டி பிரமாண்டமான விருந்து நடைபெற்றது. அவ்விழாவிலும் விருந்திலும் சீனுவிற்கான சோவியத் தூதர் டால்ஸ்டிகோவும் சோவியத் தூதுவராலுவலகத்தின் ராஜதந்திரிகளும் மற்றும் ஏனைய நாட்டு பிரதிநிதிகளும் கலந்துகொண்டனர் என நவசீன செய்திஸ்தாபனம் அறிவித்துள்ளது.

—ராய்ட்டர்

---

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

தாதுக்களை எடுக்க அனுமதிக்கப்பட்டுள்ள அச்சர்வ தேசக் கார்ப்பரேஷனுல் முதல் 16 வருடங்களில் எடுத்து விற்பனை செய்வதன் மூலம் கிடைக்கும் வருமானம் முழுவதும் அக் கார்ப்பரேசனுக்கே சொந்தம்.

# ஏ. பி. பழனிச்சாமி குடும்பப் பாதுகாப்பு நிதி

(அக்டோபர் 17-க்கு முன்பு வந்தவையும், அதற்குப் பின் வந்தவையும்)

| | ரூ— பை |
|---|---|
| கோவை காட்டன் மில் தோழர்கள் | 7—00 |
| ,, ,, தோழர் ஐயப்பன் | 5—00 |
| கோவை உப்பிலிபாலம் மாதர் சங்கம் கோவிந்தம்மாள் மூலம் | 10—00 |
| ,, ராஜலெட்சுமி மில் தோழர்கள் | 10—00 |
| தாராபுரம் தாலுகா கமிட்டி டி. பி. முத்துச்சாமி மூலம் | 15—00 |
| கோவை சிறுமுகை கிளை | 10—00 |
| ,, 14-வது வார்டு கிளை | 5—00 |
| ,, பாரதிபுரம் கிளை | 5—00 |
| ,, 15-வது வட்டாரம் திரு. வி. க கிளை | 5—00 |
| தெ, ஆ. மாவட்டம் ஏணிக்காரன் தோட்டம் கிளை | 5—00 |
| ,, என், ஆர் ராமசாமி மூலம் சாகரை கிளை | 5—00 |
| சேலம் மாவட்டம் குஞ்சாண்டியூர் கிளை | 5—00 |
| ,, ஆர். சி. பிளாண்ட் கிளை | 6—00 |
| புதுக்கோட்டை காவேரி நகர் கிளை பிளமின்தாஸ் மூலம் | 10—00 |
| ஏ, கிருஷ்ணன், சென்னை—1 | 32—00 |
| ராயப்பேட்டை கிளை சென்னை—14 | 53—00 |
| விருத்தாச்சலம் கட்சி கிளை, சோ. வா. மூ, மு. எ, ச, சி. ஜி. ராகவன் மூலம் | 20—00 |
| ஜீவா நினைவு மன்றம், கணபதி, கோவை—6 | 5—00 |
| சிவானந்தாஸ்டீல்ஸ் தொழிலாளர்சங்கம் பாடி, | 5—00 |
| சென்னை—81-33-வது டிவிஷன் ''நண்பர்கள் குழு'' கே. சி. சங்குண்ணி மூலம் | 31—00 |
| பம்பாய் ஜனநாயக வாலிபர் சங்கம் கே, பி, ஜானகியம்மாள் மூலம் | 101—00 |
| ஒட்டன்சத்திரம் கிளை—கே. பழனிமுத்து மூலம் | 30—00 |
| வேலூர் ''பாரதி நண்பர்கள்'' | 10—00 |
| கோவை சாவரின் இன்ஜினீயரிங் தொழிலாளர் | 31—00 |
| ,, நிர்மலா இண்டஸ்ட்ரீஸ் | 25—00 |
| ,, பிரகாஷ் இன்ஜினீயரிங் கம்பெனி | 25—00 |
| ,, கணபதி இன்ஜினீயரிங் மேனுபாக்சரர்ஸ் (பி) லிமிடெட் கட்சி கிளை | 10—00 |
| ''செம்மலர் வாசகர்கள்'' திருவாரூர் சேகரன் மூலம் | 12—00 |
| மதுரை கமிட்டி | 600—00 |
| சென்னை எஸ். கிருஷ்ணசாமி | 100—00 |
| சாத்தூர் தாலுகா கமிட்டி | 106—00 |
| பழனி தாலுகா கமிட்டி | 53—00 |
| சந்தரபாண்டியம்கிளை, ஈ. சங்கரலிங்கம்மூலம் | 10—00 |
| சாத்தூர் பொன்னுத்துரை | 2—00 |
| ,, பாப்பா | 2—00 |
| திருப்பூர் ஜனநாயக வாலிபர் சங்கம் ஒடைக்காடு | 20—00 |
| சென்னை மணலி இந்தியன் ஆர்கானிக் கெமிக்கல்ஸ் தோழர்கள்:— | |
| சி, சரவணபவானந்தம் | 5—00 |
| பி. ஜெயராமன் | 5—00 |
| வி. புருஷோத்தமன் | 5—00 |
| எம். விஜயராகவன் | 5—00 |
| ஆர். எப். ரஹ்மான் | 5—00 |
| தர்மராஜன் | 5—00 |
| கங்காதரன் | 5—00 |
| ஏ. சீனிவாசன் | 5—00 |
| ஆர். ரங்கநாதன் | 5—00 |
| வெங்கடசுப்ரமணி | 5—00 |
| சங்கர் | 5—00 |
| பெருமாள் | 3—00 |
| மோகன் | 2—00 |

## மதுரை மாநகரில் நவம்பர் புரட்சி தினம்

சோவியத் நாட்டில்முதன் முதலாக 1917-ஆம் ஆண்டு அக்டோபர் 25-ல் (பழைய காலண்டர்படி) பாட்டாளி வர்க்க அரசான சோசலிஸ்ட் அரசு நிறுவப்பட்டதன் 59-ம் ஆண்டு விழா மதுரை மாநகரில் கோலாகலமாகக் கொண்டாடப்பட்டது. நகரில் எங்கு பார்த்தாலும் செம்பதாகைகளும் செங்கொடிகளும் செங்கொடித்தோரணங்களுமாக— அதிவிமரிசையாகக் கொண்டாடப்பட்டது.

ஒவ்வொரு வட்டாரத்திலும் வாழ்த்தொலிகள் முழங்கிட, வாணவெடிகள் ஒலித்திட தோழர்கள் ஊர்வலமாக சென்று, புதிய செங்கொடிகள் ஏற்றப்பட்டன. பல இடங்களிலும் ஒலி பெருக்கிகள் அமைக்கப்பட்டிருந்தன. மார்க்ஸ், ஏங்கல்ஸ், லெனின், ஸ்டாலின், ஹோ-சி-மின், மாவோ மற்றும் கம்யூனிச இயக்கத்தின் சர்வதேச, இந்தியத் தமிழக தலைவர்களின் படங்கள், மலர் மாலைகளாலும், வண்ணவிளக்குகளாலும் அலங்கரிக்கப்பட்டு வைக்கப்பட்டிருந்தன.

### மாதர் சங்கம் சார்பில் கருத்தரங்கு

தமிழக ஜனநாயக மாதர் சங்கம் சார்பில்நவம்பர் புரட்சி தினமும், வரதட்சணை ஒழிப்பு கருத்தரங்கும்அன்றுமாலைஇராதாகிருஷ்ணதிருமணமண்டபத்தில் நடந்தது. நூற்றுக்கணக்கான பெண்கள் உட்படசுமார் 2000 பேர் கலந்து கொண்டு

சிறப்பித்தனர்.

தமிழக ஜனநாயக மாதர் சங்கத் தலைவர் கே. பி. ஜானகியம்மாள் தலைமை வகித்தார். மதுரை மாவட்டத் தலைவர் ஆர். கஸ்தூரி அனைவரையும் வரவேற்றார்.

துணைத் தலைவர் மைதிலி சிவராமன் ''நவம்பர் புரட்சியும் மாதர்களும்'' எனும் பொருள் பற்றி சிறப்புரையாற்றினர்.

'பாரதியும் பெண்களும்' என்பது பற்றி வீரலெட்சுமி உடையப்பா (தமிழரசுக் கழகம்), ''பெண்களும் சமத்துவமும்'' என்பது பற்றி செல்வி பாலசந்திரிகா (ஸ்தாபன காங்கிரஸ்), 'மஹரும் சீதனக் கொடுமைகளும்' என்பதுபற்றி அலி பாத்திமா (இந்திய யூனியன் முஸ்லிம் லீக்) ஆகியோர் பேசினர்.

வரதட்சணை கொடுமை எதிர்ப்பு, ஆபாச சினிமா மற்றும் சுவரொட்டிகளைத் தடை செய்தல், மிகவும் ஏழ்மைப் பட்ட நிலையில் உள்ள மக்களுக்கு மத்திய, மாநில அரசுகளின் கடனுதவி, குடும்பக் கார்டுகள் விநியோகம் ஆகிய பிரச்சினைகள் மீதான தீர்மானங்களை தோழர் கே. பி ஜானகியம்மாளும்,

குடும்பக் கட்டுப்பாடு பற்றிய தீர்மானத்தை திண்டுக்கல் தனலெட்சுமியும்,

பெண்களுக்கு வேலை வாய்ப்புக் கோரும் தீர்மானத்தை புலவர் செல்வி வெண்மணிச் செல்வியும்,

மற்றுமொரு தீர்மானத்தை சந்தானம் அம்மாளும் வாசிக்க, பலத்தகரவொலிகளுடன் நிறைவேற்றப்பட்டன.

## காஸ்ட்ரோ படிப்பகம் மீண்டும் துவங்கப்பட்டது

மதுரைமேலப்பொன்னகரம் மெயின்ரோடில் 'காஸ்ட்ரோ படிப்பகம்' அதே இடத்தில் மீண்டும் அமைக்கப்பட்டு அதன் திறப்புவிழா நவம்பர் 7-ந் தேதி காலை நடந்தது. ஜனநாயக மாதர் சங்க மாநில உதவித்தலைவர்தோழர் மைதிலி சிவராமன் படிப்பகத்தைத் திறந்துவைத்து வாலிபர் முன்னணிக்கொடியை ஏற்றி வைத்தார். மற்றும் அப்பகுதிகளில் பல இடங்களில் செங்கொடிகளை ஏற்றிவைத்து, நவம்பர் புரட்சியின் சிறப்புகளைக் குறிப்பிட்டார்.

———

## காஞ்சியில் வரதட்சணை எதிர்ப்பு மாநாடு

காஞ்சிபுரத்தில் ஜனநாயக மாதர் சங்கத்தின் சார்பில் அக் 31-ந் தேதியன்று வரதட்சணை எதிர்ப்பு மாநாடு சிறப்பாக நடந்தேறியது. தோழர் கே. எஸ். பி. புஷ்பம்மாள் தலைமை வகித்தார். கூட்டத் துவக்கத்தில், மாதர்கள் விடுதலை பற்றி பாரதியார் இயற்றிய பாடல்கள் பல பாடப்பட்டன.

தோழர்கள் தணிகைச் செல்வனும், வெண்மணியும் உணர்ச்சிமிகு கவிதைகள்பாடி பெண்களை ஊக்குவித்தார்கள்.

மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி சார்பில் பேசிய தோழர் ஏ, கே. ஆழ்வார், பெண்கள் தங்களதுமுன்னேற்றத்துக்காக வேண்டி செய்யவேண்டியது என்ன என்பதை விளக்கினர்.

இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி சார்பில் தோழர் கண்ணகி, சாந்தி, ஜனநாயக மாதர் சங்கத்தின் சார்பில் காஞ்சிபுரம் கிளைத் தலைவர் நவநீதம், சரோஜா, ஆண்டாள், சென்னை என். எஸ். ருக்மணி அம்மாள் ஆகியோர் பேசினர்கள்.

மாதர் சங்கத்தின்மாநிலச் செயலாளர் பாப்பா உமாநாத், உதவித்தலைவர் மைதிலி சிவராமன் ஆகியோர் சமுதாயத்தில் பெண்களின் அந்தஸ்து பற்றி விளக்கினர்கள். பெண்களது அந்தஸ்து உயர்ந்தால்தான் வரதட்சணைக் கொடுமையை ஒழிக்க முடியும் என்றும், பெண்களுக்கு சமத்துவம் என்பது சோசலிச நாடுகளில்தான் உண்மையாக ஏற்பட்டிருக்கிறது என்றும் பல்வேறுஉதாரணங்களுடன் விளக்கினர்.

## மலேசியாவில் கூட்டுத்தொழில் இந்திய முதலாளிகள் கருத்து

மலேசியாவில் இந்திய முதலாளிகள் அமைத்துள்ள கூட்டுத் தொழில்களுக்கு தேவையான நிதியுதவி அளிக்க அனுமதிக்கவேண்டும்; அக்கூட்டுத்தொழில்களை ஆரம்பிக்கும்போது மட்டுமல்லாமல் அவைகளை விரிவுபடுத்தும் போதும் நிதி உதவி அளிக்க அனுமதிக்கவேண்டும்அவ்வாறு அனுமதிப்பதானது அனுகூலமான நிலையிலிருந்து இந்திய முதலாளிகள் செயல்படுவதற்கான நீண்டகாலப் பாதையை ஏற்படுத்தும் என்று இந்திய வர்த்தகதொழிற் சம்மேளனத்தின் தூதுக்குழு கேட்டுக்கொண்டுள்ளது.

இக்குழு சமீபத்தில் மலேசியாவிற்கு சென்று வந்தது. அதனடிப்படையிலான ஒரு அறிக்கையின்மூலம் மேற்கண்டவாறு கூறியுள்ளது.

தற்போது, வெளிநாடுகளில் அமைக்கப்படும் கூட்டுத் தொழில்களில் இந்தியாவின் பங்கு மூலதனம், இயந்திரங்களாகவும் தளவாடங்களாகவும் அளிக்கப்படுகின்றன. இக்கொள்கையை மறுபரிசிலனை செய்யவேண்டிய அவசியம் ஏற்பட்டுள்ளது. அதிகமான மூலதன அடிப்படையில் அக்கூட்டுத் தொழில்கள் செயல்படும் வகையில் கடன் பத்திரங்களுக்கு நிதி அளிக்கவும் கடன்களை விஸ்தரிக்கவும் இந்திய முதலாளிகள் அனுமதிக்கப்பட வேண்டும் என்று அந்த அறிக்கையில் கூறப்பட்டுள்ளது.

மேலும் வெளிநாடுகளின் கூட்டுத் தொழில்களிலிருந்து கிடைக்கும் லாபங்களுக்கும் அத்தொழில்களில் வேலைசெய்யும் தொழில் நுணுக்கவாதிகளின் வருமானத்துக்கும் விதிக்கப்படும் வரிகளில் மாற்றம் செய்யவேண்டும் என்றும் கோரப்பட்டுள்ளது.

மலேசியாவிலுள்ள இந்திய முதலாளிகளின் கூட்டுத் தொழில்களில் இருபது தொழில்கள் உற்பத்தியில் ஈடுபட்டுள்ளன. தூதுக்குழு விடுத்துள்ள அறிக்கையின்படி அக்கூட்டுத் தொழில்களின் மூலம் மலேயாவிலிருந்து 55கோடி ரூபாய்இந்தியாவுக்கு அனுப்பப்படுகிறது இதில் ஒருசிறுபகுதி அக்கூட்டுத் தொழில்களில் இந்திய முதலாளிகளின் மூலதனத்தை அதிகரிக்க ஒதுக்கப்படலாம்

என்றும் அக்குழுவினர் தெரிவித்துள்ளனர்.

மலேசியாவில் இந்திய முதலாளிகள் கூட்டுத்தொழில்களை விஸ்தரிப்பது பற்றி அறிக்கை விடுத்துள்ள தூதுக்குழுவில் இந்திய வர்த்தக தொழில் சம்மேளனத்தலைவர் எம். வி. அருணாசலம், முன்னாள் தலைவர் ஹரிஷ்மகேந்தரா மற்றும் கோத்தாரி, மோடி போன்ற பெரும் தொழில் அதிபர்கள் உள்ளனர்.

# நவம்பர் புரட்சியும் விடுதலைப் போராட்டங்களும்

'எங்கோ ஒரு நாட்டில் நிகழ்ந்த நிகழ்ச்சி அது' என்று இன்று உலக மக்கள் பார்க்கவில்லை. தங்கள் நாட்டிற்கும் தங்களது வாழ்க்கைக்கும் மிகவும் நெருக்கமானது, சம்பந்த முடையது என்றே கருதுகிறார்கள்,

1945-ஆம் ஆண்டு, இரண்டாவது உலக யுத்தம் முடிவடையவில்லை. இட்லரின் பாசிஸ்ட் கூட்டணியை (ஜெர்மனி, இத்தாலி, ஜப்பான்) எதிர்த்து நேசநாடுகள் (சோவியத் யூனியன், அமெரிக்கா, பிரான்ஸ், பிரிட்டன், சீனம்) நடத்திக் கொண்டிருந்த உலகப் போர் கடுமையான— அதே சமயத்தில் முடிவான கட்டத்தினை எய்திக்கொண்டிருந்த சமயம். நேசநாடுகளின் பெருந்தலைவர்கள் மார்ஷல் ஸ்டாலின், ரூஸ்வெல்ட், டிகால், வின்ஸ்டன் சர்ச்சில், சியாங்கே சேக் ஆகியோர் கூடி முக்கியமானதொரு முடிவை எடுக்கிறார்கள்.

இந்தக் கொடிய யுத்தத்தில் நாம் வெற்றி காணப்போவது உறுதி. எனினும், இப்படிப்பட்டதொரு யுத்தம் இனிமேல் நிகழாதிருக்க இதில் கூட்டாக நின்று தியாகம் புரிந்த அனைத்து நாடுகளும் சேர்ந்து நின்று புதியதொரு சர்வதேசிய அமைப்பினை உருவாக்கவேண்டும். இந்த யுத்த காலத்தில் உருவான ஒத்துழைப்பு சமாதான காலத்திலும் நீடிக்க வேண்டும். பழைய "சர்வதேச அமைப்பு" இனி பயனில்லை. அது பாசிஸ்ட் ஜெர்மனியின் ஆக்கிரமிப்புக்களையும், முசோலினியின் படையெடுப்புக்களையும், ஜப்பானிய சர்வாதிகாரி டோஜோவின் இராணுவ ஆக்கிரமிப்புக்களையும் தடுத்து நிறுத்த முடியாமல் போயிற்று. இத்தகைய பலஹீனங்கள் எதுவுமில்லாத சுதந்திர நாடுகளின் புதிய சர்வதேசிய அமைப்பு ஒன்று உருவாக்கப்பட வேண்டும் என்ற முடிவு எடுக்கப்பட்டது.

## கைதூக்கும் பிரதிநிதிக்கு கண்டனம்

வரலாற்றுச் சிறப்பு மிக்க இந்த முடிவின்படி, நேசநாடுகளின் முதல் மாநாடு கூடுகிறது— அமெரிக்காவில், சான்பிரான்சிஸ்கோ என்னுமிடத்தில். இந்த மாநாட்டில் அன்று அடிமை நிலையிலிருந்த இந்தியாவையும் பங்கு கொள்ளச் செய்தது 'பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம். அடிமை இந்தியாவை சுதந்திர நாடுகளின் மாநாட்டில் பங்குகொள்ள வைத்தது! அப்பொழுது இந்தியாவின் பிரதிநிதியாகச் சென்று வந்தவர் யார் தெரியுமா? சர் ஆற்காடு இராமசாமி முதலியார் ஆவார்.

"மாட்சிமைதங்கிய" பிரிட்டிஷ் மன்னரின் பிரதிநிதியான இந்திய வைஸ்ராயால் (கவர்னர் ஜெனரல்) அனுப்பி வைக்கப்பட்ட பிரதிநிதியே சர் இராமசாமி முதலியார். சர்வதேசிய மாநாட்டில் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்திற்கு கைதூக்கும் பொம்மையாக இருப்பதற்காகவே இந்த ஏற்பாடு.

இந்திய விடுதலை இயக்கம், பிரிட்டிஷ் ஆட்சியாளரின் இந்த அடாத செயலைக்கண்டு கொதித்தெழுந்தது. 'வெந்த புண்ணில் வேல்கொண்டு குத்தும்' இந்த அக்கிரமத்திற்கெதிராகக் கண்டனம் முழங்கினர். "ஒப்புக் கொள்ளமாட்டோம். சர் இராமசாமி அல்ல இந்தியாவின் பிரதிநிதி; வருங்கால சுதந்திர இந்தியாவின் பிரதிநிதியை சுதந்திரப் போராட்ட இயக்கமே அனுப்பும்" என்று பிரகடனம் செய்தனர்.

## நம்பிக்கை குரல்

பிரகடனம் செய்ததுடன் நின்று விடவில்லை. இந்திய தேசியக் காங்கிரசால் தேர்ந்தெடுக்கப்பட்ட திருமதி விஜயலெட்சுமி பண்டிட் இந்தியாவின் சார்பில் அந்த சர்வதேசிய மாநாட்டில் கலந்து கொள்ள அனுப்பி வைக்கப்பட்டார். பிரிட்டிஷ், அமெரிக்கா, பிரெஞ்சு ஏகாதிபத்திய நாடுகளின் செல்வாக்கிற்கு உட்பட்டிருந்த அந்த மாநாட்டில் கலந்துகொண்ட பெரும்பான்மையான பிரதிநிதிகள், வருங்கால சுதந்திர இந்தியாவின் பிரதிநிதியை வரவேற்கிறார்களா? அங்கீகரித்தார்களா? இல்லை. மறுத்தார்கள்; எதிர்த்தார்கள்.

இந்த மறுப்புக்கும் எதிர்ப்புக்கும் எதிராக ஆங்கே ஒரு குரல் எழுந்தது! "விஜயலெட்சுமி பண்டிட் அவர்கள்தான் இந்தியாவின் உண்மையான பிரதிநிதி" என்றது அந்தக்குரல்! "சுதந்திர இந்தியாவின் பிரதிநிதியாக அவர் இங்கு பங்கு கொள்ளப்போகும் நாள் வெகு தொலைவில் இல்லை. சர். ஏ. இராமசாமியல்ல இந்தியாவின் நம்பிக்கையான குரல். விஜயலெட்சுமி பண்டிட் அவர்களை, இக்கூட்டத்தில் கலந்து கொள்ள அனுமதிக்கவேண்டும்" என்று கர்ஜித்தது அந்தக் குரல்.

அது யாருடைய குரல் தெரியுமா? "நவம்பர் புரட்சி"யின் குரல். மாவீரர் லெனின் தலைமையில் நடந்த நவம்பர் புரட்சி பெற்றெடுத்த புதிய சோசலிச நாட்டின்— இட்லர் பாசிசத்தைக் குழி தோண்டிப் புதைப்பதில் பிரதான பாத்திரம் வகித்த— சோவியத் நாட்டின் பிரதிநிதியான தோழர் வி. எம். மாலட்டோவின் குரல் அது.

உலக யுத்தத்தில் தனது கூட்டாளியாக இருந்த பிரிட்டனுக்கு சமாதான காலத்தில் சங்கடம் விளைவிக்கக்கூடாதே! நண்பனுக்கு தொந்தரவு கொடுக்கக்கூடாதே என்று தோழர் மாலட்டோவ் தயங்கினாரா? பின்வாங்கினாரா? இல்லை!

## நம்பிக்கையான நண்பன்

இட்லரை ஒழிப்பதில் கூட்டாளிகளாக இருந்த இதே பிரிட்டிஷ்; பிரெஞ்சு, அமெரிக்க நாடுகளின் அரசுகள் உலகில் பல நாடுகளைப்பிடித்து அடிமைகளாக வைத்திருந்த



சர்வதேசிய ஏகாதிப்பத்தியங்கள் தான் என்பதை நவம்பர் புரட்சியில் உதித்த சோவியத் ஆட்சி மறக்கவில்லை. இந்தியா விடுதலை பெற தொடர்ந்து துணை நின்றது.

காலனி நாடுகள் மற்றும் ஒடுக்கப்பட்ட மக்களின் உண்மையான நண்பன்; நம்பிக்கையான தோழன்; ஆபத்பாந்தவன்தான் நவம்பர் புரட்சியின் தோற்றமான சோவியத் நாடு என்பதை நிரூபிக்க இன்னும் எத்தனை எத்தனையோ உதாரணங்களுண்டு.

இதே சான்பிரான்சிஸ்கோ மாநாட்டில் இந்தியாவிற்கு சுதந்திரம் வழங்க வேண்டியதன் அவசியத்தை தொடர்ந்து வலியுறுத்தி, சர்வதேசிய அரங்கில் உறுதியாக இந்தியாவின் நண்பனாக நின்று போராடி வந்தது மட்டுமல்ல...... இந்தியா விடுதலை அடைந்தவுடன், சுதந்திர இந்தியா ஐ. நா. உறுப்பினராகச் சேர்க்கப்பட்டபின், ஐ. நா. சபையின் தலைவராக இந்தியாவின் பிரதிநிதியான இதே விஜயலெட்சுமி பண்டிட்டைப் பிரேரேபித்ததும் சோவியத் யூனியன்தான்.

அன்றிருந்து இன்றுவரை, இந்தியாவின் நம்பிக்கையான நண்பன் சோவியத் யூனியன்தான் என்று இன்றைய ஆட்சி பீடத்திலிருப்போரால் அறிவிக்கப்பட்டிருப்பது குறிப்பிடத்தக்கது,

இந்தியா சுதந்திரமடைந்த நாளிலிருந்து இன்றுவரை நவம்பர் புரட்சியின் மகத்தான இலட்சியங்களை மாசுபடுத்திப் பேசியவர்களும் இந்த நாட்டிலும் பலர் உண்டு.

## அண்டப்புளுகும் இக்காலத்திய வரலாறும்

அண்டை நாடான பின்லாந்தை மிரட்டுகிறது சோவியத் யூனியன் என்றனர் சிலர்; சோசலிஸ்ட் நாடான ஹங்கேரியில் அமெரிக்கச் சதிகாரர்கள் புகுந்து எதிர்ப் புரட்சி செய்த சமயத்தில். ஹங்கேரிய நாட்டுப் புரட்சி சக்திகளுக்கு உதவிட அவர்களது வேண்டுகோளுக்கு இணங்கி செஞ்சேனை வீரர்கள் சென்றபோது, அதனை "சோவியத் ஆக்கிரமிப்பு" என்று கண்டனம் முழங்கி கூக்குரலிட்டனர் சிலர்: அதேபோல செக் நாட்டின் சோசலிச அமைப்பை உடைத்தெறிய முயன்ற சோசலிச விரோதிகளை முறியடிக்க, அந்த நாட்டின் சோசலிச சக்திகளுக்கு சோவியத் உதவியபோது அதை 'மிகப் பெரும் ஆக்கிரமிப்பு, நடவடிக்கை' என்று கண்டனம் முழங்கினர் சிலர்.

ஒவ்வொரு சோவியத் குடிமகனும் நான்காண்டுக்கொரு தடவை தேர்தலில் பங்கு கொள்ளவும், தான் தேர்ந்தெடுக்கப்பட்டு மேல் அதிகார அமைப்பில் இருந்து செயல்படவும் உரிமை வழங்கப்பட்டுள்ள சோவியத் நாட்டில் 'மனித உரிமை எதுவுமே அங்கில்லை', சோசலிச அமைப்பு என்பது 'சுதந்திர மனிதர்களுக்கு ஒரு சிறைக்கூடம்' என்று மேலைய நாட்டு முதலாளி வர்க்கத்தினர் செய்த பிரசசாரத்தை இந்தியாவிலும் எதிரொலித்தனர் சிலர்.

இவ்வாறு சோசலிச நாடுகளுக்கு எதிராக மேற்கத்திய நாடுகளில் செய்யப்படும் கம்யூனிஸ்ட் எதிர்ப்புப் பிரச்சாரங்கள் அனைத்தையும் இந்திய நாட்டிலும் கட்டவிழ்த்துவிட்டு நவம்பர் புரட்சியின் மகத்தான மனித இலட்சியங்களை மாசுபடுத்திட முனைந்தனர்.

இமயம் போன்ற யதார்த்த உண்மைகளின் முன்பு அண்டப்புளுகு— ஆகாசப்புளுகுக் கோட்டைகளெல்லாம் முட்டி மோதி உடைந்து தகர்ந்தது இக்காலத்திய வரலாறு.

## மனித இலட்சியங்கள்

நவம்பர் புரட்சியின் இலட்சியங்கள் இருபதாம் நூற்றாண்டின் உன்னதமான மனித இலட்சியங்களாகும்.

மனித உரிமை, ஜனநாயகம், சுதந்திரம், நாடுகளிடையே சமத்துவம், பரஸ்பரம் உதவி, சகோதரத்துவம், ஒத்துழைப்பு, சகல ஆக்கிரமிப்புகளுக்கும் எதிர்ப்பு, ஆகியவை மட்டுமல்ல; மனிதனை மனிதன் சுரண்டுவதை முற்றாக ஒழித்தல், சாதி—மத—இன—வருண பேதங்களுக்கு எதிர்ப்பு, சுரண்டலற்ற, வர்க்க பேதமற்ற சமுதாய அமைப்பு ஆகியவையும் அந்த இலட்சியங்களாகும்.

இந்த இலட்சியங்கள் வெறும் ஏட்டுச் சுரைக்காய்களாக நில்லாமல், நடைமுறை வாழ்வில் அமுல் நடத்திக்காட்டப்பட்டுள்ளதுதான் இந்த இலட்சியங்கள் ஜீவிதத்தன்மை வாய்ந்த பௌதீக சக்தியாக விளங்குகின்றன. உலகப்பாட்டாளி வர்க்கத்தின் எதிரிகள். இந்த இலட்சியங்கள் ஏட்டளவில் நில்லாமல் எதார்த்த வாழ்க்கையில் உருப்பெறுவதைக் கண்டு நடு நடுங்குகின்றன. அடக்குமுறைகள் ஒடுக்குமுறைகள் மூலம் இவை பரவி விடாமல் தடுத்துவிடலாம் என்று கனவு காண்கின்றனர்.

## நவம்பர் புரட்சியின் பாதையிலே

அவர்களது கனவுகள் பலிக்கவில்லை. பலிக்கப் போவதுமில்லை.

உலகில் மூன்றில் ஒரு பகுதி இன்று நவம்பர் புரட்சி வழியில் நடைபோடுகிறது.

15 நாடுகளில் நவம்பர் புரட்சி வழியில் பாட்டாளிவர்க்கத்தின் ஆட்சி நடைபெறுகிறது.

100-க்கு மேற்பட்ட சுதந்திர நாடுகள் இந்த சோசலிச நாடுகளின் உதவியுடன். விடுதலைபெற்று உலக அரசியலையே மாற்றி விட்டன. அது மட்டுமல்ல, இந்த நாடுகள் சோசலிச உலகத்தின் நெருங்கிய நண்பர்கள் என்று பிரகடனப்படுத்திக் கொள்வதில் பெருமைப்படவும்செய்கின்றன அல்லவா!

வாழ்க நவம்பர் புரட்சி!

வெல்க அதன் இலட்சியங்கள்!

## சரித்திரத்தின் சரித்திரம் என்ன?

"பொருளாதார உற்பத்தி, அதை அடிப்படையாகக் கொண்டு ஒவ்வொரு சரித்திர சகாப்தத்திலும் அவசியமாக எழுகிற சமுதாய அமைப்பு முறை— ஆகிய இவ்விரண்டுமே அந்தந்த சகாப்தத்தின் அரசியல் சரித்திரத்துக்கும் சிந்தனையின் சரித்திரத்துக்கும் அடித்தளமாக அமைந்துள்ளன...... எனவே (நிலத்தின் மீதுஇருந்த புராதன கம்யூனிஸ்ட் உறவுகள் அழிந்து மறைந்த காலந்தொட்டு) சரித்திரம் முழுவதுமே வர்க்கப் போராட்டங்களின் சரித்திரமாக— சுரண்டுபவனுக்கும் சுரண்டப்படுபவனுக்கும் இடையில நடக்கும் போராட்டங்களாக— சமுதாய வளர்ச்சியில் பல்வேறு கட்டங்களில் வாழ்ந்த ஒடுக்கப்பட்ட வர்க்கங்களுக்கும் அடக்கியாண்ட வர்க்கங்களுக்கும் இடையே நடக்கிற போராட்டங்களாக— இருந்து வந்திருக்கிறது...

ஆனால் இந்தப் போராட்டம் இப்பொழுது ஒரு கட்டத்தை எட்டியிருக்கிறது. இந்தக் கட்டத்தில் சுரண்டப்பட்டு அடக்கப்பட்டு வருகிற வர்க்கமாகிய தொழிலாளி வர்க்கம் தன்னைச்சுரண்டி அடக்கி வருகிறவர்க்கமாகிய முதலாளிவர்க்கத்தினிடமிருந்து விடுதலைபெற வேண்டுமென்றால் அதேபொழுதில் சமுதாயம் பூராவையும் சுரண்டலிலிருந்தும் வர்க்கப் போராட்டங்களிலிருந்தும் நிரந்தரமாக விடுவித்தாகவேண்டும்

—பிரெடரிக் ஏங்கல்ஸ்



# கொத்தடிமைகளை விடுவிக்கும் பணியில் விவசாயிகள் சங்கம்

-தோழர் கோதாவரி பருலேகர்

(சென்ற இதழின் தொடர்ச்சி)

விவசாயத் தொழிலாளர்களுக்கான அரசின் குறைந்தபட்சக் கூலிச் சட்டங்களை அலட்சியப்படுத்தும் பண்ணையார்கள், தங்களது அடிமைகளுக்கு—பட்டினி கிடக்கக் கூடிய அளவுக்கு மிகக்குறைந்த கூலியே கொடுக்கின்றனர்.

நிலப்பிரபுக்களுக்கு அறுவடைக் காலங்களில் வேலையாட்கள் தேவைப்படுவார்கள் அல்லவா? அதற்காக ஒருசிறு சலுகை கொடுத்து ஆட்களைத் தக்க வைத்துக் கொள்கிறார்கள். "சின்ன மீனைப்போட்டு பெரிய மீனைப்பிடிக்கும் தந்திரம்" அவர்களுக்குத்தெரியாதா என்ன? அதாவது, கூலி ஆட்களை அறுவடைக் காலங்களில் எளிதாக— சிரமம் ஏதுமின்றி பெறுவதற்காக அவர்களுக்கு சிறு துண்டுநிலங்களை கொடுக்கிறார்கள். அந்த நிலத்தில் ஒரு மணங்கு அல்லது இரண்டு மணங்கு நெல்லே விளையும். அடிமைகள் தங்களது பண்ணையார்களின் நிலங்களில் வேலை செய்த நேரம்போக எஞ்சிய நேரங்களில் இந்தச் சிறு நிலங்களில் சாகுபடி செய்கிறார்கள். இந்தத் துண்டு நிலத்திலிருந்து கிடைக்கும் நெல்லே அவர்களுக்கு தங்களது பண்ணையார் நிலத்தில் செய்யும் சாகுபடி வேலைகளுக்கு கூலியாகும். இது அரை கிலோ அரிசி வீதம் வரும்.

### விவசாயிகள் சங்கம் நடவடிக்கை

ஒரு கூலியாள் 'ஒருநாள் வேலைக்குபோகாவிடினும் - காரணம் என்னவாக இருந்தபோதிலும்—அவன் சொந்தமாக விளைவித்திருந்த நெல்லையும் பண்ணையாரே அறுவடை செய்து கொள்வார். இந்த மாதிரி சிறு நிலத்தை சாகுபடிக்குக் கொடுப்பதை 'பரோஜ்' என்றும், நிலத்திற்குப் பதிலாக ஒரு மணங்கு அல்லது 2மணங்கு நெல்லாகவே கொடுப்பதை 'வகி' என்றும் பெயரிட்டு அழைக்கப்படுகிறது. இரண்டும் ஒரே தன்மைத்ததுதான் தினம்அரை கிலோ அல்லது 1கிலோ அரிசிக்காக காலம் முழுவதும், கதிர் அறுத்தல், அடித்தல், இடித்தல் உட்பட எல்லா வேலைகளையும் பண்ணையாருக்குச் செய்தாக வேண்டும்.

இத்தகைய கொடுமைக்கு ஆட்பட்ட அடிமைகளை விடுவிக்க வேண்டி விவசாயிகள் சங்கம்நடவடிக்கைகள்எடுக்கத் துவங்கிய காலம்வரை நூற்றுக்கணக்கான அடிமைகள் வாதா தாலுகாவில் இருந்தனர்.

### வாழ்நாள் முழுவதும் அடிமை

கொத்தடிமைகளைப் போலவே, திருமணத்திற்காக கடன் பட்ட அடிமைகளும் இப்பகுதியில் இருந்தனர். தங்களது திருமணத்திற்காக கடன் வாங்கிய பணத்தை திருப்பிச் செலுத்த முடியாது போய், பலர் அடிமைகளாக வேலை செய்தனர். அந்தக் கடன் தீரும் வரை கணவன், மனைவி; குழந்தை குட்டிகள் அனைவரும் அடிமைகளாக உழைக்க வேண்டும். எந்தக் கடனும் எப்போதும் தீர்க்கப்பட்டதில்லை. எனவே, அவர்கள் அடிமைகளாகவே வேலைசெய்ய வேண்டிய கட்டாயம்.

ஓராண்டுகால வேலைக்கு ஒரு வேலையாள் ஒரு லங்கோட்டையும் (வேஷ்டி), சட்டையும், சில சமயம் துண்டும் பெற்று வந்தான். அத்துடன் காலையில் புகைப்பதற்காக கொஞ்சம் புகையிலையும் பீடி இலைகளையும் பெற்று வந்தான். அதேபோல்—ஒரு பெண்ணுக்கு சேலை, மேல் சட்டை மட்டும்—அதுவும் கூட போதுமான அளவு உடையதல்ல—கிடைத்தது. மட்டமான அரிசி சிறிதளவு உப்பும் சில சமயங்களில் சிறிதுபருப்பும் கொடுக்கப்பட்டது. அவர்களுக்கு ரொக்கமாக ரூ. 5 லிருந்து 10 வரை தரப்படும்.

இந்த வழக்கம் கடந்த 50, 60 ஆண்டுகளாக நடைமுறையில் உள்ளது. இதற்கு முன்பு இவர்களுக்கு கூலி ஆண்டுக்கு எட்டணா முதல் ஒரு ரூபாய்வரைதான் கொடுக்கப்பட்டது. இந்தக் கூலியைக் கொண்டு அவர்கள் ஒரு போதும் தங்களது கடன்களை திருப்பிக்கொடுக்க முடியாது அல்லவா! இதனால் தங்கள் வாழ்நாள் முழுவதும் அடிமைகளாக இருப்பதோடு மட்டுமல்லாமல், தங்களது குழந்தைகளையும் அடிமைகளாக்குகிறார்கள்.

### தொடர் பிரச்சாரம்

ஜவகர் தாலுகாவில் 'குன்சா' கிராமத்து அடிமை ஒருவன் கூறியதாவது:

எனது தகப்பனார் ஓர் அடிமையாகவே இருந்து இறந்தார், என் மகனும் என்னுடன் அடிமையாகவே வாழ்கிறான். என்னுடைய பாட்டனார் எவ்வளவு தொகை கடன் வாங்கினார் என்பது எனக்குத் தெரியாது. அக்கடன் எப்பொழுது தீரும் என்பதும் எனக்குத் தெரியாது."

இதுபோன்ற அடிமைகளை விவசாயிகள் சங்கம் விடுவித்துள்ளது.

"அடிமைமுறை" என்பது சட்ட விரோதமானது என்பதையும், அவர்களை நிலப்பிரபுக்கள் சுரண்டுவதற்கு எந்த உரிமையும் இல்லை என்பதையும், அவர்களிடையே விவசாயிகள் சங்கம் தொடர்ந்து பிரச்சாரம் செய்து வருகிறது. அவர்கள் இதை உணர்ந்து, ஒன்றுபட்டு— ஓரணியில் நின்று - உறுதியாகத்தீர்மானம் கொண்டு முன்வந்து விட்டால் எந்த சக்திதான் இவர்களை ஆட்டிப்படைக்க முடியும்? அடக்கி ஒடுக்கி ஆளமுடியும்? கொத்தடிமைகளின் வாழ்க்கை நிலையைப்-பற்றியும், அவர்களை நிலப்பிரபுக்களின் பிடியிலிருந்து விடுவிக்க வேண்டும் என்று கோரியும் மகஜர் ஒன்று மராட்டிய முதலமைச்சர் திரு எஸ் பி சவாண் அவர்களிடம் விவசாயிகள் சங்கம் அளித்தது.

கொத்தடிமைகளின் துயர நிலைமைகளை படம் பிடித்துக் காட்டி பொது மக்களின் ஆதரவைத் திரட்டும் நோக்கத்தோடு மராத்தி நாளிதழ் ஒன்றில் கட்டுரை ஒன்றும் விவசாயிகள் சங்கம் சார்பில் பிரசுரமானது.

அடிமைகளின் கூட்டங்கள் கூட்டப்பட்டன. விவசாயிகள் சங்கத் தோழர்கள் ஒவ்வொரு குடிசைக்கும் சென்று சந்தித்துப் பேசி விளக்கம் அளித்து உற்சாகப்படுத்தினர். ஒவ்வொரு தனிப்பட்ட— அடிமையின் விடுதலைக்காகவும், அவர்களுக்கு குறைந்தபட்ச கூலிக்காகவும். கொத்தடிமை முறை ஒழிப்பின்கீழ் வேலை வாய்ப்புகளைப் பெற்றுத்தரவும் வாதா தாசில்தாரிடம் மனுக்கள் அளிக்கப்பட்டன.

### தாசில்தார் விளக்கம்

அடிமைகளிடையே ஒற்றுமையுணர்வையும் அநீதிகளை எதிர்த்து முறியடிக்கும் வகையில் போராட்ட உணர்வையும் ஏற்படுத்தவேண்டி, இவ்வாண்டு ஜூலை மாதம் 14-ந் தேதி வாதா தாசில்தார் அலுவலகத்தின் முன் 500 ஆதிவாசி அடிமைகளை வி.ச.திரட்டியது. அவர்கள் பல குழுக்களாக பல்வேறு திசைகளிலிருந்து—பல்வேறு இடங்களிலிருந்து தாசில்தார் அலுவலகத்துக்கு—பத்துப் பதினைந்து கல் தொலைவிலிருந்து வந்து அடைந்தார்கள். அன்று கொட்டும் மழைவேறு! மழையிலும் நனைந்து கொண்டே— நடந்தே வந்து சேர்ந்தனர்.

அடிமைகளுக்கு கடன்கள் எப்படி ஏற்பட்டது? அதற்கான காரணம் என்ன? அவை எந்தெந்த முறைகளில் அரசால் ரத்துச் செய்யப்படுகின்றன என்ற விவரங்களையும்,குறைந்தபட்ச கூலி விகித விவரங்களையும் தாசில்தார் விளக்கினார். மேலும், கொத்தடிமை ஒழிப்பு முறையின் கீழ் வேலைகள் தொடங்குவதாகவும் உறுதியளித்தார்.

இதேபோல் மேலும் பல அடிமைகள் அப்பகுதிகளில் விடுவிக்கப்பட்டார்கள் அந்தப்பகுதிகளில் கோரிக்கைகள் வெற்றி பெறுவதற்காகவும், பிடிவாதமும் முரண்டும் பிடிக்கின்ற பண்ணையார்களை அடக்கவும் விவசாயிகள் சங்க ஊழியர்கள் தொடர்ந்து கடமை ஆற்றினார்கள், ஆற்றுகிறார்கள்.

இப்பகுதிகளில் ஆதிவாசிகளின் விடுதலைச் சின்னமாக செங்கொடி விளங்குகிறது.

குறிப்பு:

தோழியர் கோதாவரி பருலேகர் அவர்கள் எழுதிய

**'ஆதிவாசிகள் கிளர்ச்சி'**

எனும் நூல் சாகித்ய அகாடமி பரிசு பெற்றுள்ளது என்பது குறிப்பிடத்தக்கது.

(முற்றும்)

---

## மூலதனமும் கூலி உழைப்பும்

"மூலதனத்தின் நலன்களும் தொழிலாளர்களுடைய நலன்களும் ஒருமித்து விடுவதாய் கூறுவதானது, மூலதனமும் கூலியுழைப்பும் ஒரே உறவின் இரு பக்கங்களாகும் என்று கூறுவதாகுமே ஒழிய வேறல்ல. கொள்ளை வட்டிக்காரரும்ஊதாரியும் எப்படி ஒருவருக்கொருவர் நிபந்தனையாய் அமைகின்றனரோ, அதே போலமூலதனமும் கூலியுழைப்பும் ஒன்றுக்கொன்று நிபந்தனையாய் அமைகின்றன.

—காரல்மார்க்ஸ்

## புதிய சகாப்தத்தைத் தோற்றுவித்த புரட்சி

"அக்டோபர் புரட்சி புதிய சகாப்தத்தைத் தோற்றுவித்துள்ளது; ஏகாதிபத்திய நாடுகளில் பாட்டாளிவர்க்கப் புரட்சிகளின் சகாப்தத்தைத் தோற்றுவித்துள்ளது.................... காலனி நாடுகளின் புரட்சி சகாப்தத்தைத் தோற்றுவித்துள்ளது. ஒடுக்கப்பட்டுள்ள நாடுகளில் இந்தப் புரட்சி பாட்டாளிவர்க்கத்தின் கூட்டுடனும், பாட்டாளிவர்க்கத்தின் தலைமையிலும் நடத்தப்படுகிறது. இது, காலனி மற்றும் சார்பு நாடுகளின் விடுதலைக்கான சகாப்தம்; இந்த நாடுகளில் பாட்டாளி வர்க்கம் விழிப்படைந்துள்ள சகாப்தம்; புரட்சியிலபாட்டாளிவர்க்கம் தலைமை தாங்கும் சகாப்தம் தொடங்கியுள்ளது.

"அக்டோபர் புரட்சியானது, ஏகாதிபத்தியத்தை அதன் ஆதிக்கத்திலுள்ள நாடுகளில் குலுக்கியது மட்டுமின்றி, அதன் தாய்நாடுகளில் குலுக்கியது மட்டுமின்றி, காலனி சார்பு நாடுகளில் ஏகாதிபத்தியத்தின் பாத்திரத்தையே குலைத்து அதன் முன் பலத்தையே தகர்த்துள்ளது.

"முன்பு உலகப்புரட்சி இயக்கம்பெற்றிராத சக்தி வாய்ந்த உலகப்புரட்சி இயக்கத்தின்மையத்தைஅதுசிருஷ்டித்தது. அதைச்சுற்றி,இப்போது அது, ஏகாதிபத்தியத்துக்குஎதிராக பாட்டாளி வர்க்கத்தின், ஒடுக்கப்பட்ட நாடுகளின் ஒன்றுபட்ட புரட்சி முன்னணியை அணி திரளச்செய்ய முடியும்...... முதலாளித்துவத்தின் ஸ்திரத்தன்மை சகாப்தம் மறைந்து விட்டது. அத்துடன் பூர்ஷ்வா அமைப்பு அழிக்க முடியாதது என்ற பிரமையும் மறைந்து விட்டது."

—ஸ்டாலின்

## உணர்வுகளை நிர்ணயிப்பது என்ன?

"மனிதர்களு[illegible]

## மீண்டும் சென்னையில் சர்க்காரியா கமிஷன்

# சர்க்கரை ஊழல் பற்றிய புகார் மீது விசாரணை

தமிழக முன்னாள் முதலமைச்சர் திரு. மு. கருணாநிதி மற்றும் அவரது சக அமைச்சர்கள் 7 பேர்கள் மீதான லஞ்ச—ஊழல் புகார்கள் பற்றிய குற்றச் சாட்டுகளை விசாரிக்க மத்திய அரசு நியமித்துள்ள சர்க்காரியா கமிஷன் சென்னையில் இரண்டாவது முறையாக துவங்கியது. இவர்கள் மீது கூறப்பட்டுள்ள 27 குற்றச்சாட்டுகளில் ஒன்றான 'சர்க்கரை ஊழல்' பற்றி விசாரித்து சாட்சியங்களைப் பதிவு செய்யவே கடந்த 13-ந் தேதியன்று 'காஞ்சி' மாளிகையில் துவங்கியது. இதில் திரு. கருணாநிதியும், ப. உ. சண்முகமும் சம்பந்தப்பட்டுள்ளதாக அக்குற்றச்சாட்டில் கூறப்பட்டுள்ளது.

இந்த விசாரணையில் இருமுறை சாட்சியம் அளித்தார் அருணா சுகர்ஸ் லிமிடெட்டின் நிர்வாக இயக்குநரான திரு பி மருதப்பிள்ளை.

1970ல் லெவி சர்க்கரையை மொத்த விற்பனையாளர்களுக்கு வெளிமார்க்கெட் விற்பனைக்காக நேரடியாக சப்ளை செய்ய அனுமதியளிக்க வேண்டுமானால், முன் நிபந்தனையாக கணக்கில் வராமல் மூடை ஒன்றுக்கு ரூ 3 வீதம் தனக்கு ரொக்கமாக அளிக்க வேண்டும்என்று அப்போதைய முதலமைச்சர் திரு கருணாநிதி சர்க்கரை ஆலை அதிபர்களிடம் கேட்டார் என்றும், அந்தத் தொகைகளைவசூலித்துத் தரும் பொறுப்பை தானே ஏற்றுக் கொண்டதாகவும் அவர் கூறினார்.

தான் மிகவும்கஷ்டப்பட்டு வசூலித்த 13லட்சத்து22ஆயிரத்து 773 ரூபாய் 50காசு தொகையை 16 தவணைகளில் திரு கருணாநிதியிடம் அளிக்கப் பட்டதாகவும், முதல் தவணையாக ரூ 3,77,443ஐ தானும், சக்திசுகர்சைச் சேர்ந்த கைலாசக்கவுண்டரும்சேர்ந்துஅளித்ததாகவும், ஒரே ஒருதடவை முதலமைச்சரின் அந்தரங்கச் செயலாளராக இருந்த திரு. வைத்தியலிங்கம் மூலம் அளித்ததாகவும் கூறினார்.

### வைத்தியலிங்கம் சாட்சியம்

திரு. வைத்தியலிங்கம் சாட்சியம் அளிக்கையில் 1970—71-ல் தான் இரு தடவைகளில் பணம் பெற்று முதலமைச்சரிடம் அளித்ததாகவும், தென்னிந்திய சர்க்கரை ஆலை அதிபர்கள் சங்கத்தின் தமிழ்நாடு கிளைக்கு அப்போது தலைவராக இருந்த திரு. மருதப்பிள்ளை, ஆலைகள் சார்பில் அளித்த பணம் நூறு ரூபாய் நோட்டுக்களாக இருந்தது என்றும், சக்தி சுகர்ஸ் லிமிடெட்டைச் சேர்ந்த காலஞ்சென்ற கைலாசக் கவுண்டர் ஒரு நபர் மூலம் அளித்த தொகை ரூ. 1, ரூ. 5, ரூ. 10 நோட்டுக்களாக இருந்தன என்றும் கூறினார். இந்தப்பணம் கறைப்பட்ட பணம் என்பது தனக்குத் தெரியும் என்றும் ஆனால் இது பற்றிதன்னால் எதுவும் செய்ய இயலவில்லை என்றும், மறுப்புக் கூறியிருந்தால் முதலமைச்சரின் கோபத்திற்கு உள்ளாக நேரிடும் என்றும் அவர் கூறினார்.

அமைச்சர்களுக்கு வழங்குவதற்காக வேண்டி, ரிகார்டில் பதியாத சர் சார்ஜாக ஈ ஐ.டி பாரி கம்பெனியும், அதைச் சார்ந்த இரு சர்க்கரை ஆலைகளும் ரூ. 4. 82 இலட்சம் வசூலித்ததாகவும், அதை அமைச்சர்களிடம் தருவதற்காக அந்தத் தொகையைமருதப்பிள்ளையிடம் தந்ததாகவும், ஈ. ஐ. டி. பாரி கம்பெனியைச் சேர்ந்த திரு. ஜெயராமன் சாட்சியம் அளித்தார்.

இதேபோன்று, பணம் கொடுத்ததாகவும், பணம் வாங்கிக் கொடுத்ததாகவும் காவேரி சுகர்ஸ், டெக்கான் சுகர்ஸ் ஆலைகளது நிர்வாக இயக்குநர் திரு. எஸ். என். லால், மதுரை சுகர்ஸ் லிமிடெட் பிரதம நிர்வாக அதிகாரி திரு. எல். முத்தையா, வால்குடி சர்க்கரை ஆலை நிர்வாகியாக இருக்கும் (அப்போது—கோத்தாரி சுகர்ஸ் தலைமை அலுவலக உதவி நிர்வாகி) திரு. டி. எல். ராகவன், வடபாதி திரு ஆரூரான்சுகர்ஸ் நிர்வாக மேனேஜர் திரு ஆர். ராமகிருஷ்ணன், ஈரோட்டு பிக்சர்ஸ் பட அதிபர் திரு. என். சொக்கலிங்கம், மதுரை சுகர்ஸ் லிமிடெட் முன்னாள் நிர்வாக அதிகாரி திரு. டி. வி. கிருஷ்ணமூர்த்தி, அருணா சுகர்ஸ் சர்க்கரை ஆலை விற்பனை மேனேஜர் திரு. எம்; கணேசன் ஆகியோரும் மற்றும் சிலரும் சாட்சியங்கள் அளித்தார்கள்.

### மருதப்பிள்ளையின் மறுப்பு

திரு. மருதப்பிள்ளை 2-வது தடவையாக சாட்சியம் அளிக்கையில், தன் மீது முன்னாள் அமைச்சர் சண்முகம் கூறியுள்ளபுகார்களை மறுத்தார்.

தன்னை சந்தர்ப்பத்துக்கு ஏற்ப பொய் சொல்லும் பேர்வழி என்றும், 'மிசா'வைக் காட்டி பயமுறுத்தியே எனது வாக்கு மூலம் வாங்கப்பட்டது என்றும் திரு சண்முகம் புகார் கூறியிருப்பது சரியல்ல என்றார் மருதப்பிள்ளை. தன்னை யாரும் பயமுறுத்தவில்லை என்றும், மனப்பூர்வமாகவே எனது வாக்குமூலத்தை சமர்ப்பித்தேன் என்றும் கூறினார்.

இதே போல் கருணாநிதி கூறியுள்ள புகாரையும் அவர் மறுத்தார்.

'சி.பி.ஐ'(மத்திய உளவு இலாகா) பொய் வாக்குமூலம் கொடுக்குமாறு என்னை வற்புறுத்தி வருவதாக்வும், அதை நான் எதிர்த்து வருவதாகவும் பிறகு வேறு வழியில்லாமல் பொய் வாக்குமூலம்கொடுத்து விட்டதாகவும் பொது நண்பர் ஒருவரிடம் ஒரு பொது சந்திப்பின்போது நான் குறிப்பிட்டேன் என்று கருணாநிதி புகார் கூறியிருப்பது தவறு' என்றார்.

மேலும் 'கணக்கில் காட்டப்படாத கறுப்புப் பணம் எதுவும் சக்கரை ஆலைகளிடம் கிடையாது' என்று அவர் குறிப்பிட்டார்.

இங்கு இரண்டாம் முறையாக விசாரணை துவங்குமுன்பு சென்னையில் ஒருதடவையும் புதுடெல்லியில்இருதடவையும் விசாரணைகள் நடந்தன.

தமிழ்நாட்டில் பயிர்களுக்கு விமானம் மூலம் 'பூச்சி மருந்து தெளிப்பதில்' ஊழல் நடந்துள்ளது என்றும், பள்ளிக்கூட பாடநூல்களை விற்பதற்கு நாதன் பப்ளிகேசன்ஸ் என்ற நிறுவனத்துக்கு ஏகபோக உரிமை வழங்கப்பட்டதில் ஊழல் நடந்துள்ளது என்றும் கூறப்பட்டுள்ள புகார்கள் பற்றிய விசாரணைகள் அவை.

### பூச்சி மருந்து தெளிப்பு

பூச்சி மருந்து தெளிப்பதற்கான காண்ட்ராக்டுகளை விடுவதற்கு திரு. கருணாநிதியும் அன்பில்தர்மலிங்கமும் சுமார் 7 இலட்சம் ரூபாய் லஞ்சம் பெற்றதாக புகார் கூறப்பட்டுள்ளது. இது குறித்து சென்னையில் நடந்த விசாரணையில் 7 பேரும் டெல்லியில் நடந்த விசாரணையில் ஒருவரும் விசாரிக்கப்பட்டனர். தவிர, அப்போது தமிழக அரசில் அதிகாரிகளாக இருந்த அந்தரங்க செயலாளர் வைத்தியலிங்கம், வேதநாராயணன், அரிபாஸ்கர் ஆகியோரும் விசாரிக்கப் பட்டனர்.

### நூல் விநியோக உரிமை

அன்பில்தர்மலிங்கம் சம்பந்தப்பட்டிருந்த நாதன் பப்ளிகேசன் நிறுவனத்துக்கு அளவுக்கு மீறி சலுகைகள் அளித்ததாக அப்போதைய கல்வி அமைச்சர் திரு. நெடுஞ்செழியன் மீது கூறப்பட்டுள்ளபுகார் சம்பந்தமாக 12-ந்தேதிநடந்த விசாரணையில், அப்போதைய பிரதம கல்வி ஆலோசகராக இருந்த திரு. எம், டி, பால் சாட்சியம் அளித்தார்.

### நீதிபதி சர்க்காரியா கருத்து

பாடப் புத்தகங்கள் விநியோகிப்பதற்காக வேண்டி குறைவான கமிஷன் கேட்ட பல டெண்டர்கள் நிராகரிக்கப்பட்டு அதிக கமிஷன் கேட்டவர்களின் டெண்டர்கள் ஏற்கப்பட்டது என்றும், இதனால் பாடநூல் கழகத்தின் நலன்கள் பாதிக்கப்பட்டன என்றும் அவர் கூறினார்.

பிரதிவாதிகள் விசாரணையிலிருந்து விலகிவிட்டதுபற்றி நீதிபதி சர்க்காரியா, விசாரணையிலிருந்து அவர்கள்விலகியிருப்பது, அவர்கள் தெரிவித்துள்ள காரணங்களுக்காக அல்ல என்றும் சம்பந்தமில்லாத வேறு காரணங்களை மனதில்கொண்டே அவர்கள் வெளியேறியுள்ளனர் என்றும் கூறியுள்ளார்.

(சென்னையில் நடந்த சர்க்காரியா கமிஷன் விசாரணை 8-ந் தேதியுடன் முடிந்தது. அடுத்து வரும் 15, 16-ந் தேதிகளில் விசாரணை துவங்கும். அப்போது, அன்பில் கொலை வழக்கு; குடிநீர்வடிகால்வாரிய ஊழல், தாதாச்சாரிஎஸ்டேட் ஊழல் உட்பட பல புகார்கள் மீது விசாரணை நடைபெறும்)

---

## சோவியத்-சீன வேற்றுமைகள் சீக்கிரமே நீங்கட்டும்

### இ. எம். எஸ். நவம்பர் தின செய்தி



இந்திய கம்யூனிஸ்ட் கட்சியின் (மார்க்சிஸ்ட்) பொலிட் பீரோ உறுப்பினர் தோழர் இ. எம். எஸ். நம்பூதிரிபாட் விடுத்த நவம்பர் புரட்சி தின செய்தி;

"ருஷ்யாவில் வெடித்த நவம்பர் புரட்சியானது, உலக வரலாற்றிலேயே பொன்னெழுத்துக்களால் பொறிக்கத்தக்க முக்கியத்துவம் வாய்ந்ததாகும் நவம்பர் புரட்சியானது, அக்காலத்தில் ஒன்றுபட்டிருந்த முதலாளித்துவ உலகில் ஏற்பட்ட முதல் உடைப்பு ஆகும். அந்த உடைப்பு ஏற்பட்டு 59 ஆண்டுகள் கடந்துவிட்டன. இத்தனைக் காலமும் உடைப்பு மேலும் மேலும விரிவடைந்து கொண்டேபோகிறது. மனிதகுலததின் மூன்றிலொரு பங்குக்குமேல் இன்று சோசலிச உலகததில் வாழ்கின்றது. சோசலிச உலகத்தில் ஒரு காலத்தில் பின் தங்கிக்கிடந்தநாடுகளையும்வளர்ச்சியடைந்த முதலாளித்துவ நாடுகளையும் பிரித்துவைத்தஇடைவெளியானது, படிப்படியாகச்சுருங்கிக்கொண்டேயிருக்கிறது. ஆதலால், முதல சோசலிச தேசத்தின் நமது தோழர்களுக்கு நாங்கள் எங்களது உளமார்ந்த வாழ்த்துக்களை அனுப்புவதுடன், அவர்கள் தங்களுடைய போராட்டத்தில் வெற்றிகளைக் குவிக்க வேண்டுமென்றும் நாங்கள் விரும்புகிறோம்.

---

## ஏ.ஐ.டி.யூ.சி. மாநாடு

ஜாம்ஷெட்பூரில் சமீபத்தில்நடைபெற்ற ஏ.ஐ.டி.யூ.சியின் (வலது கம்யூனிஸ்ட் தலைமையிலான தொழிற்சங்கம்) மாநாடு 5நாட்களாக விவாதங்கள் நடத்தியும், தீர்மானங்கள் நிறைவேற்றிய பிறகும்கூட அச்சங்கத்தில் ஏற்பட்டுள்ள பிரிவுகளை தீர்த்துக் கொள்வ முடியவில்லை. மாறாக தொழிற்சங்க அரங்கில் ஏ, ஐ. டி,யூ.சி. எந்தளவுக்கு தனிமைப்பட்டு இருக்கிறது என்பதை அம்மாநாடு மீண்டுமொரு முறை அம்பலப்படுத்தியுள்ளது.

'பிஸ்னஸ் ஸ்டான்டர்டு' அக் 10

ஜாம்ஷெட்பூரில நடைபெற்ற ஏ.ஐ.டி.யூ.சி. மாநாட்டில் எஸ்.ஏ.டாங்கே, பொதுச் செயலாளர் அறிக்கையை சமர்ப்பித்தார். மாநாட்டின் பெரும் பகுதி பிரதிநிதிகள் அந்த அறிக்கையின் மீது அதிருப்தி கொண்டனர்.

பிஸ்னஸ் ஸ்டான்டர்டு அக் 15

கதவடைப்பு, லாக்அவுட், லே-ஆப் சம்பந்தமாக ஏ.ஐ.டி யூ.சி. எடுத்துள்ள நிலைமீது ஜாம்ஷெட்பூரில் நடைபெற்ற அதன் மாநாட்டில் கலந்து கொண்ட மேற்குவங்க பிரதிநிதிகளில் பெரும் பகுதியினர் முரண்பாடு கொண்டனர்.

பிஸ்னஸ்ஸ்டான்டர்டு அக் 15

---

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) தமிழ் மாநிலக்குழு சார்பில் "தீக்கதிர்" அச்சகத்தில் [6]16 பைபாஸ் ரோடு மதுரை 625018] அச்சிட்டு வெளியிடுபவர் எம் ஆர் வெங்கட்ராமன்